# சத்ய சாயி சங்கீதாஞ்சலி

சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு,
கன்னடம், மலையாளம், இந்தி, வங்காளம்,
குஜராத்தி, மற்றும் மராத்தி மொழிகளில்

பகவான் ஸ்ரீ சத்ய
சாயிபாபா அவர்களின்
71 வது பிறந்த தினமான
நவம்பர் 23, 1996 அன்று
ஆந்திர மாநிலம் புட்டபர்த்தியிலுள்ள
அவரது ஆசரமத்தில் ஸ்ரீபகவானின்
திருக்கரங்களால்
வெளியிடப்பட்டது.




## பகவான் பாபாவின்

பாதகமலங்களில்

## திருமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

அவர்களின் சமர்ப்பணம்

RPG ENTERPRISES

**அனைத்து கேசட் வியாபாரிகளிடமும் கிடைக்கும்**




இந்த கேசட் 10-4-1997 முதல் சென்னை இராஜா அண்ணாமலைபுரம்,
7. பக்ஸ் ரோடு, **'சுந்தரம்'** வளாகத்திலும் விற்பனைக்குக் கிடைக்கும்.

# மயிலை இளைஞர் மரணம்!

**— பின்னணி ரிப்போர்ட்**

• யுத்தகளமான மயிலை (படம் நன்றி: நக்கீரன்)

“ஐயோ, அண்ணா உம் புள்ள செத்துட்டான்னு பேப்பர்ல போட்டுருக்கானே...” என்று பூக்கார அம்மான் ஒருவர் சொன்ன கணத்தில் இரவு முழுவதும் தம் மகனைக் காணாமல் தேடிக் கொண்டு வந்த கபாலீஸ்வரன் அதிர்ச்சியில் நிலைகுலைந்தார். மறு கணம், “ஐயையோ எம் புள்ளைய போலீஸ்காரனுங்க கொன்னுட்டாங்களே...” என்று அடிவயிற்றிலிருந்து குரலெடுத்து அலறியபடி மார்பில் அறைந்து கொண்டு அந்தக் குடியிருப்பு பகுதிகளின் மிகக் குறுகலான சந்து பொந்துகளில் ஓடினார் தமது வீட்டை நோக்கி!

செய்தியைக் கேட்டு அவர் மனைவி லதாவும் தலையிலும், வயிற்றிலுமடித்தவண்ணம் தரையெல்லாம் புரண்டு ஓலமிட, மயிலை பகுதியிலுள்ள பல்லக்கு மாநகர் குடியிருப்பு முழுவதும் காட்டுத் தீயென செய்தி பரவியது. சில நிமிஷங்களில் சுமார் ஐநூறு பேருக்கு மேல் திரண்டனர்.



• ரமேஷ்

“போன வருஷம் தான் பதிமூனு வயசுப் புள்ள சதீஷை கூட்டிக் கொண்டு போய் போலீஸ்காரனுங்க கொன்னுட்டாங்க...” என்றது ஒரு குரல். “நேத்து சதீஷ்; இன்று ரமேஷ் நாளைக்கு யாரோன்னு இது ஒரு தொடர்கதையா

யிக்கிட்டு இருக்குது.. இதுக்கு ஒரு நியாயம் வேண்டாமா?'' என்று சிலர் ஆவேசப்பட்டனர்.

அனைவரும் மயிலை போலீஸ் ஸ்டேஷனை நோக்கிச் சென்றனர். இதையெல்லாம் எதிர்பார்த்தே அந்தக் காலை வேளையிலும் கணிசமான போலிசார் உஷார் நிலையிலிருந்தனர். 'போலீஸ் அராஜகம் ஒழிக!' என்று கோஷமிட்டது மக்கள் கூட்டம்.

போலீஸ் ஸ்டேஷனுக்கு முன்னால் நின்றபடி. ''அடப்பாவிகளா, எம் புள்ளைய கொன்னுட்டீங்களே... நீங்க நல்லா யிருப்பீங்களா...'' என்று கூப்பாடு போட்டார் ரமேஷின் தாய்.

"எம்புள்ள ரமேஷ் எங்க?' என்றேன். 'ரமேஷோட அப்பனா நீ?' என்று என்னை முறைத்தார் போலீஸ்காரர்."

• கபாலீஸ்வரன்

நிலைமையின் விபரீதத்தை உணராமல் ஒரு கான்ஸ்டபிள் லத்தியால் அவரது நெஞ்சிலமுத்தி பின்னுக்குத் தள்ளி, ''ஏய், இதெல்லாம் ஸ்டேஷனாண்ட வச்சுக்காதே...'' என்று சொல்ல, கூட்டத்திலிருந்த இளைஞன் ஒருவன் பாய்ந்து வந்து அந்த கான்ஸ்டபிளின் கன்னத்தில் அறைந்தான்! அடுத்த சில கணங்களில் அங்கு ஒரு யுத்தமே மூண்டது, போலீசுக்கும், பொதுமக்களுக்கும்.

உடனே, மேலிடத்திற்குத் தகவல் தெரிவிக்கப்பட்டு, பத்து வேன்களில் போலீஸார் வந்து குவிந்தனர். கமிஷனர் உட்பட அனைத்து உயர் போலீஸ் அதிகாரிகளும் களத்திற்கு வந்து விட்டனர். கற்கள் பறந்தன. பல்லவன்கள் நொறுங்கின. கடைகள் மளமளவென்று அடைக்கப்பட்டன. லத்திகள் சுழன்றன. கண்ணீர்ப் புகை சூழ்ந்தது. கமிஷனருக்கும் காயம் பட்டது. அந்தக் கூட்டத்தில் எப்படியோ மாட்டிக் கொண்ட நான்கு இளைஞர்களின் மேல் ஒட்டுமொத்த போலீசும் பாய்ந்து அடித்து நொறுக்கியது. ரத்தம் சொட்டச் சொட்ட, தரை தேய அவர்கள் இழுத்துச் செல்லப்பட்ட போது, 'இன்னொரு மரணம் கண்முன்னாலேயே சம்பவித்து விடுமோ' என்று பார்த்துக் கொண்டிருந்த நிருபர்கள் நடுங்கித்தான் போனார்கள்.

இந்த உச்சகட்ட கொந்தளிப்பிற்குக் காரணமான இறந்த ரமேஷின் தந்தை மயிலை பகுதியின் 143-வது வட்ட எம்.ஜி.ஆர். இளைஞர் அணித் தலைவராகவும் 'புரட்சித் தலைவி பேரவை'யின் செயலாளராகவும் இருப்பதால், இந்தச் சம்பவங்கள் கட்சி மேலிடத்திற்குத் தெரிவிக்கப்பட்டன. சேடப்பட்டி முத்தையா, முன்னாள் அமைச்சர்கள் ஜெயக்குமார், மதுசூதனன்... போன்றவர்கள் களத்திற்கு வந்து சேர்ந்தனர். இன்னொருபுறம் மயிலை தி.மு.க. எம்.எல்.ஏ. ராமஜெயம் மற்றும் அனைத்து கவுன்சிலர்களும் வந்து சேர்ந்தனர்.

ஒருவழியாக அமைதி திரும்ப, தடைபட்ட போக்குவரத்து துவங்க ஐந்து மணி நேரமானது.

" போலீஸ்காரங்க இப்படிச் சொல்றாங்களே !"

நடந்த சம்பவம் என்ன என விசாரித்ததில் கிடைத்த தகவல்:

ரமேஷ் தன் நண்பர்கள் ஸ்டாலின், பன்னீரோடு

• வாட்ச்மேன் மூர்த்தி

சிக்னலை கவனிக்காமல் லஸ் கார்னரில் சாலையைக் கடக்க, அவனை தமக்கேயுரிய தோரணையில் கண்டித்த கான்ஸ்டபிளுடன் வாக்குவாதம் முற்றி நிலைமை விபரீதமானது. பன்னீரும், ஸ்டாலினும் எவ்வளவோ கெஞ்சி யும், இதைப் பார்த்துக் கொண்டிருந்த இன்னொரு பெண்மணி ஒருவரும் எவ்வளவோ மன்றாடியும் சட்டைசெய்யாமல் ரமேஷை ஏற்றிக் கொண்டு, போலீஸ் வேன் ஒன்று மயிலை போலீஸ் ஸ்டேஷன் நோக்கிச் சீறிப் பாய்ந்தது.

''தகவலறிஞ்சு நானும், எம் பொண்டாட்டியும் போலீஸ் ஸ்டேஷன் போனோங்க. சுத்துப்புறமெல்லாம் கரண்ட் இருக்க போலீஸ் ஸ்டேஷன் மட்டும் கும்மிருட்டில் இருந்ததுங்க. வாசலிலேயே என்னை நிறுத்திய ஒரு போக்கு வரத்து போலீஸ்காரரிடம், 'எம்புள்ள ரமேஷ் எங்க?' என்றேன். 'ரமேஷோட அப்பனா நீ?' என்று என்னை முறைத்தவர், 'அவன் தான் வர்ற வழியிலேயே குதிச்சு ஓடிட்டானே... வூட்டுக்குப் போயிப்பாரு, வந்திருப்பான்!' என்று துரத்தினார்.

"ரமேஷ் தப்பியிருந்தால் நம்மை ஸ்டேஷனிலேயே உட்கார வைத்து, அவனை ஒப்படைக்கக் கோரி நிர்ப் பந்திப்பார்களே... என்று குழம்பினேன். போலீஸ் ஸ்டேஷனென்றால் காசு இல்லாமல் எந்த வேலையும் நடக் காது என்று நான் வீட்டிலிருந்து தயாராய் எடுத்துச் சென்ற ஆயிரம் ரூபாயையும் அப்படியே எடுத்துக் கொண்டு திரும்பினேன். எம் மகன் வுழுந்து செத்தான்னு சொன்னாங் களே, அதே பாலம் வழியாத்தான் நானும் எம் பொஞ்சாதியும் வூடு வந்து சேர்ந்தோம்!" என்றார் கபாலீஸ்வரன்.

"ஐயா எம் புள்ள சகதியில வுழுந்து செத்துட்டதா சொல் றாங்க... மார்ச்சுவரியில பாடியை பார்த்தப்ப நெத்தி யில அவ்வளவு ஆழமா ஒரு கீறல்... பிடறி மண்டையிலிருந்து ரத்தமா கொட்டுது. மூக்கு, வாயி எல்லாம் ரத்தமாயி ருந்திச்சு..." என்றார் ரமேஷின் சித்தி சுந்தரி.

"கால்வாயிலிருந்து சடலத்தை எடுத்ததற்கு வெறும் சாட்சிக் கையெழுத்துமட்டும் தான் போட்டேன். ஆனால் போலீஸாரோ நான்தான் முதலில் புகார் கொடுத்ததா சொல்றாங்களே!'' என்றார், துரித ரயில் திட்டத்தில் வாட்ச்மேனாக வேலை பார்க்கும் மூர்த்தி.

**ப**ல்லக்கு மாநகர் பகுதிக்கு நாம் சென்ற போது, பொதுமக்கள் நம்மைச் சூழ்ந்து கொண்டனர். "நீங்க பத்திரிகைக்காரங்களா? எல்லாம் கேட்கறீங்க... ஆனா என்னென்னவோ எழுதறீங்க... நல்லா விசாரிச்சு எழுதாமல் பலரும் மனம் போன போக்கில் எழுத றாங்களே..." என்று ஒரு சில வார, தினசரி இதழ்களைக் காட்டி நம்மிடம் குமுறினார்கள். இன்னும் சிலர் "அன்னைக்கு நாங்க செய்த கலாட்டா பத்திதான் எழுதுனாங்க. அதுக்கப் புறம் இங்க போலீஸ்காரங்க கூட்டமா வந்தப்போ என்ன ஆச்சுன்னு ஏன் எழுத மாட்டேங்கறீங்க?'' என்றனர். காவல் துறை



• ரமேஷின் தங்கைகள்...

**"அவன் சாவு செய்தி கேட்டதிலிருந்து நிர்மலா திக்பிரமை பிடிச்ச மாதிரி அமைதியாயிட்டா!"**



''நீங்க ஏன் ஏற்கெனவே திருமணமான ஒருத்தரை மேரேஜ் பண்ணிக்கிட்டீங்க?''

''முன்னணி நடிகைகள் வரிசையில அப்படியாச்சும் இடம் கிடைக்காதான்னு தான்!''

— சீர்காழி வி. ரேவதி

---

பேரில் அவர்கள் இன்னமும் கோபமாகத்தான் இருக்கிறார்கள்.

ரமேஷின் நண்பர்கள் பேசுகையில், "அவன் ரொம்ப சாதுவானவங்க. புரசைவாக்கத்தி லுள்ள ஒரு ஜவுளிக்கடையில் வேலை பார்க்கிறான். வீட்டுல நெறைய சினிமா பாட்டு கேசட்டு வெச்சிருக்கான். அதைக் கேட்பான். இல்லைன்னா டி.வி. பார்ப்பான். ஒரு சின்ன வம்பு தும்புல கூட அவன் பேரு அடிபட்ட தில்லை. நைட்டு ஒம்பது மணிக்கு மேல வெளியில சுத்த மாட்டான். பேச வரமாட் டான். 'வீட்ல அப்பா திட்டுவாங்க என்று பயந்துக்கிட்டு ஓடிடுவான். அவனுக்கா இந்த நெலமை வரணும். எங்களால மறக்க முடியலையே..." என்று கதறினார்கள்.

ரமேஷின் தங்கை ஷீலாவிடம் பேசிய போது, "நானும் எங்கண்ணனும் அடிக்கடி சண்டை போட்டுக்குவோம். இன்னொரு தங்கை நிர்மலாவும் அவனும் ரொம்ப பிரண்ட்ஸ். அவன் சாவு செய்தி கேட்டதி லிருந்து நிர்மலா திக்பிரமை பிடிச்ச மாதிரி அமைதியாயிட்டா! யாரோடயும் எதுவும் பேசல... மூணு நாளா எதுவும் சாப்பிடலை. அந்த சோகத்தோட இந்த சோகமும் எங்க குடும்பத்தை வாட்டுது" என்றாள்.

ரமேஷ் மரணம் குறித்து ஓய்வு பெற்ற நீதிபதி ஒருவரை நியமித்து விசாரணை நடத்தவிருப்பதாகத் தமிழக அரசு அறிவித் துள்ளது.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு, மயிலை போலீஸ் ஸ்டேஷனின் மூன்று வாயில்களில் நடுவாயில் மட்டும் எப்போதும் சாத்திய வண்ணமுள்ளது. அங்குள்ள நமது போலீஸ் நண்பரொருவரிடம் காரணம் கேட்டபோது, "அந்த நடுவாயில் திறந்திருக்கும்போதெல்லாம் ஸ்டேஷனில் ஏதாவது அசம்பாவிதம் நடந்து விடுகிறது. இப்படிச் சில அனுபவங்களை யடுத்தே இனி அந்தக் கதவைத் திறப்பதே யில்லை என்ற முடிவுக்கு வந்து விட்டோம். கபாலீஸ்வரர் கோயில் அர்ச்சகர்களை அழைத்து வந்து ஸ்டேஷனில் விசேஷ பூஜை நடத்தவும் உத்தேசித்துள்ளோம்!" என்றார் ரகசியமாக.

- எஸ்.கே.

படங்கள் : தில்லை அரசன்

---



## இது என் பூனை இல்லை!

ஒரு பார்சி செல்வந்தர் ஒருவர் தமது வளர்ப்புப் பூனையுடன் நியூயார்க்கிலிருந்து சென்னைக்கு, 'பிரிட்டிஷ் ஏர் வேஸ்' விமானத்தில் பறந்து வந்தார். விமான சட்டப்படி, பூனை ஒரு கூண்டிலிடப்பட்டு சாமான்கள் வைக்கும் இடத்தில் விமானத்தில் வைக்கப்பட்டது. ஆனால் லண்டன் ஹீத்ரோ விமான நிலையத்தில், சில ஊழியர்கள் பார்த்தபோது பூனை இறந்து விட்டிருந்தது! ஊழி யர்கள், அந்தச் செல்வந்தர் தங்கள் மீது வழக்கு தொடரக் கூடும் என பயந்து, விமானம் அடுத்து கிளம்ப இருந்த இடைவெளி நேரத்தில், கிட்டத் தட்ட அதே மாதிரி தோற்றமளித்த பூனை ஒன்றைக் கண்டுபிடித்து, இறந்து போன பூனைக்குப் பதி லாகக் கூண்டில் வைத்து விட்டனர். சென்னை விமான நிலையத்தில் பூனை அவரிடம் ஒப் படைக்கப்பட்டதும் அவருக்குக் கடுங்கோபம் வந்துவிட்டது. ''இது என் பூனை இல்லை; என் பூனை இறந்து விட்டிருந்தது'' என்றார் பார்சி பணக்காரர்.

'பிரிட்டிஷ் ஏர் வேஸ்' சிப்பந்திகள் திடுக் கிட்டனர். அந்த பூனை இந்தியாவில் பிறந்தது. அதனால் அதன் உடலை, பிறந்த மண்ணிலேயே அடக்கம் செய்ய எடுத்து வந்தாராம் எஜமான். வானத்துக்கும் பூமிக்குமாகக் குதித்தார். பல தடவை லண்டனை தொலை பேசியில் தொடர்பு கொண்டும், அந்த இறந்த பூனையைக் கண்டு பிடிக்க முடியவில்லை. கடைசியில் பார்சி தனவானிடம் கெஞ்சிக் கூத்தாடி, அந்த புதுப் பூனையை ஏற்றுக் கொள்ளும்படி செய்தனர்.

— 'பிசினஸ் இண்டியா'விலிருந்து:
கிருஷ்ணவேணி ரங்கனாதன்

## தில்லி நியூஸ்:

# லல்லு நடத்திய பூஜை!

● தமது சொந்த ஊரான கோபால்கஞ்சுக்கு ஹெலிகாப்டரில் பறந்தார். அங்கே, தாபே என்கிற இடத்திலுள்ள காளி கோயிலில் விசேஷ பூஜை செய்தார்; உருக்கமாகப் பிரார்த்தனை செய்தார்! அதோடு நிற்க வில்லை. வருகிற வழியில் தமது சொந்த கிராமமான புல்வாரியாவில் இறங்கி, எல்லாரிடமும் ஆசி கோரினார்.

திரும்பி பாட்னா வந்தவர், நேரே தாக்கூர்பாரி கோயிலுக்குப் போய், பெரிய பூஜை நடத்தினார். ஷிட்லா மாதா கோயிலில் பலி கொடுத்து பிரம்மாண்டமான பூஜையும் செய்தார். யார்? லாலு பிரசாத் யாதவ்.

கால்நடைத் தீவன ஊழலில் தாம் சிக்கிக் கொண்ட பிறகு, லாலு வெகு தீவிர பக்தராகி விட்டார் என்பது உண்மைதான். ஆனால் மேற்கண்ட பூஜைகளும் பிரார்த்தனைகளும் எதற்காக என்கிறீர்கள்? நடந்த போட்டியில் பிரதமர் பதவி தமக்கே கிடைக்க வேண்டும் என்பதற்காக!



● வெளியுறவு அமைச்சர் ஐ.கே. குஜ்ராலுக்கு பிரச்னைகளில் சிக்கிக் கொள்ளாத அமைச்சர் என்ற நல்ல பெயர் உண்டு. இடது சாரிகளின் ஆதரவும் அவருக்கு உண்டு. ஆனால் பெரிய அளவுக்கோ—ஏன், சிறிய அளவுக்கோகூட அவருக்கு மக்கள் தொடர்பு கிடையாது என்பதுதான் அவருக்கு பாதகமான அம்சம்.

● சி.பி.ஐ.யின் வெற்றி தோல்விகள் அதன் தலைவர் ஜோகிந்தர் சிங்குக்கு எந்த விதப் பாதிப்பையும் ஏற்படுத்துவதில்லை. அவர் பாட்டுக்கு சுய முன்னேற்றப் புத்தகங்கள் எழுதித் தள்ளிக் கொண்டிருக்கிறார். இப்போது அவர் எழுதிக் கொண்டிருக்கும் நூல் இந்த மாத இறுதியில் வெளிவந்து விடுமாம்!

● ரிசர்வ் வங்கி கவர்னர் சி.ரங்கராஜன் இவ்வருடம் ஓய்வு பெறப் போகிறார். அந்தப் பதவிக்கு யார் வருவார்கள் என்ற பலத்த கிசுகிசு அடிபடத் தொடங்கி விட்டது. நிதிச் செயலர் மான்டேக் சிங் அலுவாலியாவுக்கு அந்தப் பதவி மீது ஒரு கண். போட்டியில் ஜெயிக்கப் போவது யார்? திறமையுள்ளவருக்கா, அரசியல் செல்வாக்குள்ளவருக்கா?

● உ.பி.யில் பா.ஜ.க.வும் பகுஜன் சமாஜ் கட்சியும் ஆட்சி அமைக்க முக்கிய காரண கர்த்தா என்று பத்திரிகையாளர் டி.வி.ஆர். ஷெனாயைத்தான் சொல்லுகிறார்கள். அவர் மகன் கல்யாணத்துக்கு எல்லா அரசியல் தலைவர்களும் வந்திருந்தார்கள். ஷெனாய் சுவாரசியமாய் எழுதுவது போலவே, யதார்த்தமாகப் பேசக் கூடியவர். அத்வானி, முரளிமனோகர் ஜோஷி, கன்ஷிராம் மூவரையும் ஓர் உடன்பாட்டுக்கு வரச் செய்ததில் டி.வி.ஆர். ஷெனாய்க்கு முக்கியப் பங்கு உண்டு.

● கேசரி வீட்டிற்கு வரும் அன்பர்கள் இப்போது 'காக்காய்பிடிப்பது' அவர் ஆசையுடன் வளர்க்கும் பொமரேனியன் நாயைத்தான்! அதற்கு பலவகை இனிப்புகளை வழங்குவதுடன், மரியாதையாக "குத்தாஜி! சௌக்யமா?" என்று நலம் விசாரிக்கிறார்கள்!

— நியூஸ்வாலா,

கிருஷ்ணவேணி ரங்கநாதன்.



# தொடர

சிறந்த அரசியல் சிந்தனையாளர், கண்ணியமானவர், வம்பு தும்புக்குப் போகாத அமைதியான சுபாவமுள்ளவர், அதே சமயத்தில் அயலுறவு விவகாரங்களைச் சாணக்கியத்துடன் கையாளக் கூடிய கூர்மையான அறிவு படைத்தவர் என்றெல்லாம் குஜ்ரால் பற்றி கூறப்படுகிறது.

எதிர்க் கட்சியான பி.ஜே.பி. கூட, நிலையான ஆட்சி கருதி நாடாளுமன்றத்தைக் கலைப்பது நல்லது என்று வற்புறுத்தினாலும் குஜ்ராலின் தேர்வை எதிர்த்தோ பாதகமாக விமர்சித்தோ ஏதும் கூறவில்லை!

ஐக்கிய முன்னணி அரசுக்கு காங்கிரஸ் தனது ஆதரவை விலக்கிக் கொண்ட தினத்தில், இந்தோ - பாக் பேச்சு வார்த்தைகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. மூன்று ஆண்டு இடைவெளிக்குப் பிறகு, அயலுறவுத் துறை அமைச்சர் குஜ்ராலின் முயற்சியில் மலர்ந்த பேச்சு வார்த்தைகள்! 'அரசியல் நிலவரம் பேச்சு வார்த்தைகளை பாதிக்காது' என்று சமாதானம் சொன்னார் குஜ்ரால்.

ஐக்கிய முன்னணியின் அடுத்த தலைவராகவும் நாட்டின் பிரதமராகவும் பொறுப்பேற்கும் வாய்ப்பு தமக்கு வந்து சேரும் என்று அந்த நேரத்தில் அவர் எண்ணியிருப்பாரா என்பது

# வேண்டும் ராஜதந்திரம்!

சந்தேகமே!

கம்யூனிஸ்டுகள், காங்கிரஸுக்கு நெருக்கமான த.மா.கா தலைவரை ஐ.மு. தலைமைக்கு ஏற்க விரும்பவில்லை. லல்லு பிரசாத் யாதவ், முலாயம் சிங் யாதவ் பொறுப்பேற்பதை விரும்பவில்லை. இப்படி பலதரப்பு விருப்பு வெறுப்புகளையும் சமாளித்து ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய நிலையில், இந்தர் குமார் குஜ்ரால் ஏற்புடையவராக அமைந்திருக்கிறார்.

77 வயது பஞ்சாப்காரர். விடுதலைப் போரில் பங்கு பெற்ற பெற்றோருக்குப் பிறந்து, தாமும் வெள்ளையனே வெளியேறு இயக்கத்தில் கலந்து கொண்டு சிறை சென்றவர். பாக் பிரிவினைக்குப் பிறகு ஜீலம் (பாகிஸ்தான்) என்கிற தமது சொந்த ஊரை விட்டு டெல்லிக்கு வந்து குடியேறினார். ஏற்றுமதி - இறக்குமதி பிஸினஸ் நடத்தி வந்தார்.

ஐம்பதுகளில் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து புதுடெல்லி முனிசிபல் கமிட்டி தலைவராக விளங்கி, பின்னர் ராஜ்ய சபா உறுப்பினரானார். இந்திரா காந்தி அமைச்சரவையில் பொறுப்பு வகித்தார். திட்டக் கமிஷன் உறுப்பினர், ரஷ்யாவுக்கான இந்தியத் தூதர் என்று பல பதவிகளை அலங்கரித்தவர். ஆரம்பத்தில் இந்திராவின் விசிறியாகவும் பின்னர் கடுமையான விமர்சகராகவும் இருந்திருக்கிறார்.

சரண் சிங் காலத்தில் தொடர்ந்து ரஷ்ய தூதராகப் பொறுப்பில் நீடித்து, ராஜீவ் காலத்தில் அரசுப் பொறுப்பு ஏதுவும் வகிக்காமல் இருந்தவர். இவர் முதன் முதலாக மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது 1989 - ல் தான். ஜலந்தர் தொகுதியிலிருந்து தேர்வாகி, வி.பி. சிங் அமைச்சரவையில் அயலுறவுத் துறை அமைச்சரானார்.

அயலுறவுக்குப் பயன்படுத்தி வந்த மதிநுட்பத்தையும் ராஜதந்திரத்தையும் குஜ்ரால் தமது புதிய பொறுப்பை நிறைவேற்றுவதற்குப் பயன்படுத்துவார் என நம்புவோம்; மனமாற வாழ்த்துவோம்.

**வா**ஜ்பாய் குறிப்பிட்டது போல, மூன்று வார டென்ஷனுக்குப் பின் நாடே நிம்மதிப் பெருமூச்சு விடுகிறது. ஆனால் அந்த நிம்மதி முழுமையானதாக இல்லை. ஆட்சியில் பங்கேற்பதில்லை என்ற த.மா.காவின் முடிவும் அம்பலத்துக்கு வந்துள்ள தி.மு.க - த.மா.கா புகைச்சலும் கவலை தருகின்றன.

புதிய தலைவரைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்ட கட்டத்தில் ஐக்கிய முன்னணி எம்.பி.க்களிடையே ரகசிய வாக்கெடுப்பு நடத்தி அந்தப் பணியை சுலபமாகவும் நேர் வழியிலும் முடித்திருக்கலாம். அதுவே உண்மையான ஜனநாயகமாகவும் இருந்திருக்கும்.

மாறாக, கூட்டுக் கருத்துப்படி (consensus) ஒருவரைத் தலைவராக்குகிறோம் என்று முயன்றதில் ஐக்கிய முன்னணியின் 'ஐக்கியம்' பரிசோதனைக்கு உள்ளாகி ஆட்டங் கண்டிருக்கிறது.

காங்கிரஸ் ஆட்சி நிலவிய மாநிலங்களில் 'கசமுசா' ஏதேனும் நேர்ந்தால் மூப்பனார்தான் அதைச் சரிசெய்வதற்காக அனுப்பப்பட்டு வந்தார். இப்போது ஐக்கிய முன்னணி கசமுசாவை அவரால் தீர்க்க முடியவில்லை என்பதோடு த.மா.காவின் நிலை ஒரு புதிய கசமுசாவுக்கு வேறு வழி வகுத்திருக்கிறது!

இந்த நிகழ்வுகளால் தமிழக அரசியல் நிலவரம் தீவிரமாக பாதிக்கப்படும் வாய்ப்புகள் உள்ளன என்பதை மறுக்க முடியாது. இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்துக்காகவே காத்திருக்கும் தமிழக எதிர்க்கட்சிகள் மிகச் சுறுசுறுப்பாகச் செயல்பட ஆரம்பிக்கும்.

எல்லாவற்றையும் விட கவலை தரும் விஷயம்: மத்தியில் காங்கிரஸ் கட்சி, பொறுப்புகள் ஏதும் அற்ற ஓர் அதிகார கேந்திரமாக இனி விளங்கும் என்பதுதான்.

## மாடியில் குடியிருந்த அம்மா இறந்து போனது கூட, கீழேயே குடியிருந்த மகனுக்கும், மருமகளுக்கும் தெரியவில்லையாம்!

அடுக்குமாடிக் குடியிருப்பு ஒன்றில் 77 வயதான தாயாரும், அவரது 41 வயது மகனும் வசித்து வந்தார்கள்.

திடீரென்று, அவர்களைக் காணவில்லை என, பக்கத்து வீட்டுக்காரர் போலீசுக்குத் தகவல் தந்தார்.

போலீஸ் வந்து அவர்கள் வீட்டுக் கதவை உடைத்து, உள்ளே போய்த் தேடிப் பார்த்தது.

கிட்டத்தட்ட அழுகிய நிலையில் இருவரது சடலங்களும் இருந்தன! காலியான ஷெல்ஃபுகள், காலி ஃபிரிஜ், கத்தையாக ஏராளமான டயரிகள்! இரண்டு வருடமாக அந்த டயரிகளில் எழுதப்பட்டவை அத்தனையும் சோகக் கதைகள். பட்டினி கிடந்தே இறந்து போக நேர்ந்த இருவரது சோகக் கதைகள்! தாய் எழுதியவை.

என்ன என்றே விவரிக்க முடியாத விநோத வியாதியால் பீடிக்கப்பட்ட மகன். 'வெர்ட்டிகோ' நோய் போதாது என்று முதுகுவலியால் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்த அம்மா. சேமிப்பு எல்லாம் வற்றிப்போய் சுமார் அறுபது ரூபாயில் வந்து நின்று விட்ட நிலை.

மார்ச் 11 ஆம் தேதிக்கு மேல், சாப்பிட எதுவுமில்லை.

'இனி உணவு எதுவும் சாப்பிட வழி இல்லை. என் மகன் இறந்து போய் விடுவான்' என்று டயரியில், வயதான தாயார் எழுதி வைத்திருக்கிறாள். 'ரெண்டு பேரும் சேர்ந்தே இறந்து விடுவோம். யாராவது ஒருவர் வாழ நேருவது பயங்கரமான விஷயம்' என்று எழுதியிருக்கிறாள்.

சமீபத்தில், டோக்கியோ நகரத்தில் நடந்த சம்பவம் இது.

ஜப்பானையே உலுக்கியிருக்கும் இந்தப் பட்டினிச் சாவு, அவர்கள் இதுநாள் வரை நம்பிக்கை வைத்திருந்த குடும்ப உறவுகளுக்கும், சமூக வாழ்வுக்கும் சமாதி கட்டி விட்டது. அவர்களை யோசிக்க வைத்திருக்கிறது...

மகனைத் தவிர வேறு உறவுகள் எதுவும் இல்லாத தாய்; அண்டை வீட்டுக்காரர்களிடம் கூடத் தம் இயலாமையை எடுத்துச் சொல்ல வெட்கப்பட்ட தாய். மகன் இருந்தும் உதவ முடியாத நிலையில் இருந்ததால், பென்ஷன் தரக்கூடாதா என்று அதிகாரிகளிடம் கெஞ்சிக் கேட்டும் பிரயோசனம் எதுவும் இருக்கவில்லை அவளுக்கு.

இறுதியில் -

இறந்து போன இருபது நாட்களுக்குப் பிறகு கண்டுபிடிக்கப்பட்ட தாய் - மகன் சடலங்கள்!

அவர்கள் வசித்த பகுதியான தோஷிமா அதிகாரிகள், இப்போது அந்த டயரிகளை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார்



# தாத்தாவா? பாட்டியா? -யாரது...?





கள் - எல்லாருக்கும் ஓர் எச்சரிக்கையாக இருக்கட்டும் என்று.

ஒரு தேசத்தின் மனச்சாட்சியையே குடைய வைத்து விட்டன இந்த டயரிகள். வயதானவர்கள் ஏன் இப்படி கவனிப்பாரற்று, பட்டினி கிடந்து, மரணமடைய வேண்டும்? வயதானவர்களின் ஜனத்தொகை அதிகரித்துக் கொண்டே போகிற நிலையில், அவர்களின் பாதுகாப்புக்கோ, பராமரிப்புக்கோ நாம் ஏதாவது செய்ய வேண்டாமா என்று பல கேள்விகளை எழுப்பியிருக்கின்றன. உலகின் மற்ற நாடுகளை விட ஜப்பானில்தான் வயதானவர்கள் அதிகம் பேர் இருக்கிறார்கள் என்ற உண்மையை வெளிப்படுத்தியிருக்கிறது இது. வயதானவர்களைக் காப்பாற்றும் பொறுப்பும், கடமையும், நாட்டைச் சார்ந்தது அல்ல; குடும்பத்தைச் சார்ந்ததுதான் என்று பரம்பரையாகக் கடைப்பிடித்து வந்த 'கன்ஃப்யூஷியஸ்'ஸின் சித்தாந்தத்துக்கு அடிக்கப்பட்ட மரண அடி உணர்த்தப்பட்டிருக்கிறது இப்போது.

முதியோரை அவ்வப்போது கவனித்துக் கொள்ளும் உறவினர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. வயதானவர்களைப் பராமரிக்க உதவும் அமைப்புகளும்







# இவரைப்போல் பிறக்க ஆசை!



**யாரைப்போல் பிறக்க ஆசை?**

**கே.ஆர். விஜயா:**

நடிப்பின் மூலம் நான் பெற்றிருக்கும் பெயரையும், புகழையும் அடுத்த பிறவியிலும் நான் இழக்கக் கூடாது என்பது எனது விருப்பம். அதே நேரம், உலகம் எங்கும் சென்று இன்னிசையைப் பரப்பிக் கொண்டிருக்கும் எம்.எஸ். சுப்புலட்சுமி அம்மா மீது எனக்கு மிகவும் மரியாதை.

எனவே அடுத்த பிறவியில் அவரைப் போன்ற குரல்வளமும் கொண்ட நடிகை கே.ஆர். விஜயாவாகப் பிறக்க விரும்புகிறேன்.

— மௌலி

இப்போதெல்லாம் அக்கறை எதுவும் காண்பிப்பதில்லை. 65 வயதுக்கு மேல், ஆதரவு அற்று அநாதையாக மரணமடையும் நபர்களின் எண்ணிக்கையோ, இந்தப் பத்து வருடத்தில் மூன்று மடங்காகி விட்டது!

இந்தத் தனிமை மரணங்களுக்கு அடிப்படைக் காரணங்கள் கவனிப்பாரின்மை, பட்டினி என்றுதான் சுகாதாரத் துறை அதிகாரிகள் சொல்லுகிறார்கள்.

இளையவர்கள் பெற்றோரைக் கூடக் கவனிப்பதில்லை என்பதற்கு ஒரு நிகழ்ச்சி : மாடியில் குடியிருந்த அம்மா இறந்து போனது கூட, கீழேயே குடியிருந்த மகனுக்கும், மருமகளுக்கும் தெரியவில்லையாம்!

கூட்டுக் குடும்பம் வசிக்கும் அளவுக்குப் பெரிய அப்பார்ட்மெண்ட்டுகள் கிடைப்பதில்லை என்பது மட்டுமல்ல; வயதானவர்கள் மீது காண்பிக்க வேண்டிய மரியாதை, பாசம், பணிவு எதுவும் இளைய தலைமுறையிடம் இல்லாமல் போய்விட்டது என்பதுதான் வருந்துகிற உண்மை. குழந்தைகளெல்லாம் தாத்தாவா? பாட்டியா? யாரது? என்று கேட்கிற நிலைமை!

தேர்தல்களில் இப்போது பலரும் முதியோரைக் காப்பாற்றத் தனித் திட்டங்களை அறிவிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். லிபரல் டெமாக்ரடிக் முன்னணி, 21-ஆம் நூற்றாண்டில், வயதானவர்களுக்கு மருத்துவ உதவியை அறிவித்திருக்கிறது!

லிபரல் டெமாக்ரடிக் கட்சிக்காரரான பிரதமர் ஹஷிமோடா, முதியோர் பராமரிப்பு இன்ஷூரன்ஸ் திட்டத்தை அறிமுகப்படுத்தியிருக்கிறார். (அவருடைய 82 வயதான வளர்ப்புத் தாயார், ஸ்ட்ரோக் வந்து அடிக்கடி மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்படுகிறார்.) எதிர்க்கட்சிகளும் அரசாங்கம் ஏதேனும் செய்தே ஆக வேண்டும் என்று இப்போது வற்புறுத்துகின்றன.

டோக்கியோ நகர அரசு இப்போது அடுக்கு மாடிக் கட்டடங்களைக் கட்ட ஆரம்பித்திருக்கிறது – முதியோருக்காக! பன்னிரண்டு மணி நேரத்துக்கு எந்தவித அசைவும் அங்கு குடியிருப்போரிடமிருந்து வரவில்லை என்றால், அலாரம் மணி அடிக்கும். அலாரம் ஏன்? காரணம் இருக்கிறது. சமீபத்தில் ஓர் 76 வயதுப் பெண்மணி இப்படி ஓர் அப்பார்ட்மெண்ட்டில் காலமாகி, ஒரு வாரம் கழித்துத்தான் தெரிய வந்ததாம்!

தொகுப்பு : **சாருகேசி**



# ஒரு சின்ன ஆரம்பம்தான்!

தொழில்துறை தேக்கத்தைச் சரிசெய்வதற்காகத்தான் 97-98க்கான பட்ஜெட்டில் கம்பெனி வரிகளைக் கணிசமாகக் குறைத்தார் ப. சிதம்பரம். அதே போல் தனிநபர் வருமான வரியையும் குறைத்து மக்கள் கையில் ஓரளவு பணம் தங்கும்படி செய்தார். இப்படி மிச்சமாகும் பணம் சேமிப்பிலும் தொழில்துறையிலும் முதலீடாகும் என்பது எதிர்பார்ப்பு.

பட்ஜெட்டுக்கு முன்பாகவே, Infrastructure Development Corporation அமைக்கவிருப்பதாக மத்திய அரசு அறிவித்திருக்கிறது. - இந்த அமைப்பு தொழில்வளப் பெருக்கத்துக்கு அத்தியாவசியமான சாலை, போக்குவரத்து, மின் உற்பத்தி போன்றவற்றின் பெருக்கத்தை உறுதிசெய்வதற்காக ஏற்படுத்தப்பட்டது. (Infrastructure - அடிப்படைத் தேவை)

சமீபத்தில் ரிசர்வ் வங்கியின் கடன் கொள்கையில் (credit policy) சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன.

ரிசர்வ் வங்கியின் கடன் கொள்கை பற்றி கொஞ்சம் விரிவாகச் சொல்வது நல்லது. ஏனெனில் அனைத்து வங்கிகளின் கடன் கொடுக்கல் வாங்கலுக்கான வட்டி விகிதத்தை இந்தக் கொள்கையே நிர்ணயிக்கிறது.

சமீபத்திய கொள்கை அறிவிப்புப்படி, ரிசர்வ் வங்கியிடமிருந்து பிற வங்கிகள் பெறும் கடனுக்கான வட்டி 12 சதவிகிதத்திலிருந்து 11 சதவிகிதமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

வங்கிகளில் வாடிக்கையாளர்கள் போட்டு வைக்கும் டெபாஸிட்களுக்குத் தர வேண்டிய வட்டி-விகிதமும் பத்திலிருந்து ஒன்பது சதவிகிதமாகக் குறைக்கப்பட்டுள்ளது.

ஆக, வங்கிகளுக்கு இரு முனைகளில் ஆதாயம். இந்த ஆதாயத்தில் ஒரு பகுதியை, தங்களிடம் கடன் வாங்கும் வாடிக்கையாளர்களுக்கும் வங்கியாளர்கள் வழங்குவார்கள் - அல்லது வழங்க வேண்டும். அதாவது, கடன் பெறும் வாடிக்கையாளர்களுக்கு விதிக்கும் வட்டி விகிதத்தை சற்று குறைக்கலாம். வங்கிக் கடன் வாங்குவோர் பெரும்பாலும் தொழில்துறையினர்தானே. அவர்களுக்கு வட்டிச் சுமை குறைந்தால், தொழில்துறை தேக்கமும் விடுபடும் அல்லவா!

வட்டி விகிதத்தைக் குறைத்ததோடு அல்லாமல், வங்கிகள் சுதந்தரமாக இயங்கவும் தங்கள் பொறுப்பில் பகுத்தறிந்து கடன் கொடுக்கவும் அவற்றுக்குச் சில கூடுதல் அதிகாரங்களை ரிசர்வ் வங்கி அளித்துள்ளது. இதுவும் தொழில்துறைக்கு உதவிகரமாக இருக்கும்.

இப்படி பல்முனை நடவடிக்கைகளால் தொழில் துறை தேக்கம் நீங்குமேயானால், சரக்கு போக்குவரத்தும் அதிகரிக்கும். அதனால் லாரிகளுக்கு கிராக்கி ஏற்பட, லாரி வாங்க தவணைக் கடன் தந்து தழைத்து வந்த NBFCக்கள் மீண்டும் சுறுசுறுப்பாகும். இவற்றில் நாம் போடும் டெபாஸிட்களுக்கும் சேமிப்புகளுக்கும் திரும்பவும் வரவேற்பு கிடைக்கும்.

இதெல்லாம் ஏதோ ஓரிரு வாரங்களில் நடந்துவிடும் என்று நாம் நினைத்து விடக்கூடாது! ரிசர்வ் வங்கியின் கடன் கொள்கை அறிவிப்பு ஒரு சின்ன ஆரம்பம் தான். சங்கிலித் தொடர் அறுபடாமல் எத்தனையோ விஷயங்கள் நடந்தாக வேண்டும்.

(அடுத்த வாரம்)

- வி. கோபால்ன்

## மூலம் : டேனியல் ஸ்டீல்

சிநேகிதி க்ளோவின் வீட்டை நோக்கிப் புறப் பட்டாள் ஆலிஸன். நெஞ்சுக்குள் படக்படக் கென்று இருந்தது. 'அம்மாவுக்கு உண்மை தெரிந்தால்...!' என்று எண்ணுகையில் உறுத்தல் ஏற்பட்டது.

பிலிப், ஜேம்ஸ் என்ற இரண்டு சிநே கிதர்கள் அவர்களை வெளியே அழைத் துப் போவதாக ஏற்பாடு. அந்த உண் மையை ஆலிஸனும் தன் வீட்டில் சொல்லவில்லை. க்ளோவும் தன் வீட்டில் சொல்லவில்லை.

ஆலிஸனின் வீட்டிலிருந்து க்ளோவின் வீடு அதிக தூரமில்லை. மூன்றே தெருதான். ஆனால் இன்று அவ்வளவு தூரம் கூட அவள் போக வேண்டியிருக்காது. இரண்டு பேர் வீட்டுக்கும் நடுவில் உள்ள ஓரிடத்தில் சந்திப்பதென்று பேசி வைத்திருந்தார்கள்.

அவளுக்கு முன்பே க்ளோ அங்கே வந்து காத்திருந்தாள். சொன்ன நேரத்துக்கு ஐந்து நிமி டம் தாமதமாகி விட்டதால் வேக மாக வந்ததில் ஆலிஸனுக்குக் கொஞ்சம் மூச்சு இரைத்தது.

சிவப்புக் காஷ்மீர் ஸ்வெட்டரில் இறுக்கமாய் உடை அணிந்திருந்த தோழியைக் கண்டதும், "ஹை! ஜம் மென்று இருக்கே இந்த டிரெஸ்! உன் அம்மாவோடதா!" என்றாள் க்ளோ, வியப்பினால் விரிந்த கண்களுடன்.

க்ளோவின் அம்மா டானா இந்த மாதிரி எந்த டிரெஸ்ஸும் விட்டு வைக்கவில்லை. கணவனைப் பிரிந்து லண்டனுக்குப் போன போது எல்லாவற்றையும் சுருட்டி எடுத்துக் கொண்டு போய் விட்டாள். இப்போது க்ளோ அணிந்திருந்த கறுப்பு ஸ்வெட்டர் கூட அவளுடைய சிநேகிதியொருத்தியின் அக்காவினுடையது. அதுவும்



# 11:29



## தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

அவளுக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாக எடுத்து வந்து கொடுத்திருந்தாள். 'பத்திரம்! ஞாயிற்றுக் கிழமை காலை ஞாபகமாய்த் திருப்பிக் கொடுத்து விடு! என் அக்காவுக்குத் தெரிந்ததோ - என்னைக் கொலை பண்ணி விடுவாள்!' என்று சொல்லியிருந்தாள். க்ளோ அணிந்திருந்த கறுப்பு டைட்ஸ் கூட அம்மா மறந்து போய் விட்டு விட்டதுதான்.

"நீயும்தான் ஜம்மென்று இருக்கிறாய்!" என்றாள் ஆலிஸன்.

இரண்டு தோழிகளும் ஒவ்வொருத்தி ஒவ்வொரு வகையில் அழகு. இருந்தாலும் க்ளோவின் பால் போன்ற மேனி நிறத்தையும் அதைத் தூக்கிக் காட்டுகிற மாதிரி இருந்த கருங்கூந்தலையும் பார்க்கிற போது, அவளருகில் நிற்பதற்கே ஆலிஸனுக்கு என்னவோ போலிருக்கும்.

க்ளோ கைக்கடியாரத்தைப் பார்ப்பதும் தெருக்கோடியைப் பார்ப்பதுமாக இருந்தாள்.

"ஏய்! சும்மா சும்மா அங்கே பார்க்காதே!" என்றாள் ஆலிஸன். "எனக்குப் பயமாயிருக்கிறது. இந்தத் திருட்டுக் காரியத்தில் இறங்கியிருக்கவே வேண்டாம்!"

"சீ! சும்மா இரு!" என்று அதட்டினாள் க்ளோ. "பிலிப், ஜேம்ஸ் இரண்டு பேருமே தங்கமான பையன்கள். கவலையே படாதே!"

ஜேம்ஸிடம் ரொம்பக் காலமாகவே க்ளோவுக்கு ஒரு கிறக்கம். அவன் அவளைக் காட்டிலும் ஜூனியர். பிலிப் சீனியர் மாணவன். க்ளோவை ஜேம்ஸூம், ஆலிஸனை பிலிப்பும் வெளியே அழைத்துப் போவதாக இன்று ஏற்பாடு. எல்லோருமே நீச்சல் குழுவைச் சேர்ந்தவர்கள். வெளியே போவதற்கு இன்றைய தினத்தை நிச்சயித்தவன் ஜேம்ஸ். ஏற்பாடு செய்தவள் க்ளோ. ஆனால் ஆலிஸன் பயப்பட்டாள். ஒரு சீனியர் மாணவனுடன் தனியே வெளியே செல்ல அம்மா சம்மதிக்க மாட்டாள் என்று அவளுக்குத் தெரியும். பல பேராகச் சேர்ந்து ஒரு க்ரூப்பாகச் சினிமாவுக்குப் போவதென்றால் பேஜ் சம்மதிப்பாள். அதுவும் கூட ரொம்ப நாளாய்த் தெரிந்த பையன்களாயும் பெண்களாயும் இருந்தால்தான். அனேகமாய் எல்லோரையும் அவர்களுடைய அப்பா அம்மாக்கள் அழைத்து வந்து விட்டு விட்டு, திரும்ப வந்து அழைத்துப் போவார்கள். காரணம், க்ளோவின் சிநேகிதர்களுக்கும் சரி, ஆலிஸனின் சிநேகிதர்களுக்கும் சரி, கார் ஓட்டும் லைசென்ஸ் இல்லை.

தனியாய் ஒரு பையன், தனியாய் ஒரு காரில் வந்து, தனியாய் ஒரு பெண்ணை வெளியே அழைத்துப் போவதென்பதே கிடையாது - இன்றைய இரவு வரையில். க்ளோ விஷயமும் அப்படித்தான்.

**3**

'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். ©டேனியல் ஸ்டீல்



''நான் டி.வி.க்கு எழுதி அனுப்பிய நாடகத்தை திருப்பி அனுப்பிட்டாங்க. கூடவே ஒரு கடிதமும் எழுதியிருக் காங்க!''

''என்ன எழுதியிருக்காங்க?''

''இந்த மாதிரி நல்ல நாடகத்தை யெல்லாம் எங்களுக்கு அனுப் பாதீங்க'ன்னு எழுதியிருக்காங்க!''

– லட்சுமி ஆவுடைநாயகம்

'அதிகப் பழக்கமில்லாத பையனோடு வெளியே போகக் கூடாது. அதுவும், காரை அவன் ஓட்டுகிறானென்றால், 'ஊகூம்!' என்று அப்பா தடுத்து விடுவார் என்று க்ளோவுக்குத் தெரியும். ஜேம்ஸ் அடிக்கடி வீட்டுக்கு வரு கிறவனாக இருந்தால், விருந்துகளிலும் பார்ட் டிகளிலும் சந்திக்கிறவனாயிருந்தால் ஒரு வேளை அப்பா சம்மதிக்கக்கூடும். ஜேம்ஸ் அப் படி அதிகம் வந்தது கிடையாது.

உள்ளூரப் பயந்து கொண்டுதான் ஜேம் ஸின் அழைப்பை ஏற்றுக் கொண்டிருந்தாள் க்ளோ. ஆலிஸனையும் துணைக்குச் சேர்த்துக் கொண்டாள்.

''இரண்டு பேரும் வீட்டிலே ஏதாவது பொய் சொல்லிக் கொள்ளலாம். இந்த ஒரே ஒரு தடவைதானே? அதிலே என்ன குடி முழுகிப் போய் விடப் போகிறது? ஜேம்ஸும் பிலிப்பும் நம்மிடம் எப்படிப் பழகுகிறார்கள் என்று பார்ப்போம். நல்லவர்களாகத் தெரிந் தால் பிறகு வீட்டுக்கு வரச் சொல்லி அறிமுகம் செய்யலாம்,'' என்று க்ளோ சொல்ல ஆலிஸனுக்கு முதலில் தயக்கமாகவே இருந்தது. ஆனால் பிலிப் வசீகரமானவன். அறிவு முதிர்ச்சியுடன் அமைதியாகப் பேசும் அவனு டைய குணம் ஆலிஸனுக்குப் பிடித்திருந்தது. அவனுடன் வெளியே போக இப்போது சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. அதை நழுவ விடுவானேன் என்று ஒப்புக் கொண்டாள்.

திருட்டுத்தனமாகப் போன் பண்ணி, ஸ்கூலில் ரகசியமாகப் பேசி, இன்று க்ளோவின் வீட்டுக்குப் பக்கத்தில் நால்வரும் சந்திப்பது என்று முடிவு செய்திருந்தார்கள்.

பிலிப்பிடம்தான் கார் இருந்தது. ஆகவே அவன்தான் எல்லாரையும் அழைத்துப் போவ தென்று ஏற்பாடு.

க்ளோவுக்கு ஒரு சந்தேகம். ஜேம்ஸிடம் ரகசியமாக, ''அவரவர் செலவு அவரவர் களுடையது. அப்படித்தானே?'' என்று குழந் தைத்தனமாகச் சொன்னாள். 'பாக்கெட் மனி' யாக அப்பா அவளுக்குக் கொடுத்திருந்த பணம் ஏற்கெனவே பெரும்பகுதி செலவழிந்து விட்டது. அப்பா வாங்க வேண்டாமென்று சொல்லியும் ஒரு ஜதை ஷு வாங்கிக் கொண் டதிலும், ஒரு சினேகிதிக்கு ஐந்து டாலர் கடன் கொடுத்ததிலும் அவள் கையிருப்புத் தீர்ந்து விட்டது. 'சட்! பதினைந்து வயதாகியும் செலவுக்கு இப்படிக் கஷ்டப்பட வேண்டி யிருக்கிறதே!' என்று அவளுக்கு எரிச்சலாக இருந்தது.

''அபத்தமாய்ப் பேசாதே!'' என்று ஜேம்ஸ் சிரித்தான். ''உங்கள் இரண்டு பேரையும் கூப் பிட்டதே நாங்கள்தான். ஆகவே செலவெல் லாம் எங்களுடையது!'' என்றான் பெரிய மனுஷன் போல.

ஒரு வாரமாக ஆலிஸனுக்கும் க்ளோவுக் கும் இதேதான் பேச்சு. இதேதான் சிரிப்பு. இந்த இரவு எப்போது வரும் என்று படபடத்துக் காத்திருந்தார்கள்.

இதோ வந்து விட்டது.

ஆனால் ஏன் இத்தனை நேரம்? ஜேம் ஸையும் காணோம், பிலிப்பையும் காணோமே?

''சும்மா விளையாட்டுக்காகச் சொன்னார் களோ என்னவோ. அனேகமாய் வர மாட் டார்கள் பார்,'' என்றாள் ஆலிஸன். ஒருவகை யில் ஏமாற்றமாயிருந்தாலும், சங்கடத்திலிருந்து தப்பினோம் என்று நிம்மதியாயும் இருந்தது. ''அவர்கள் தமாஷ் பண்ணியதை நாம் தப்பாய் எடுத்துக் கொண்டு விட்டோம். என்னை வெளியே அழைத்துப் போக வேண்டும் என்று பிலிப் ஆசைப்பட்டிருக்கவே மாட்டான். அவனுக்கு வயது பதினேழு. ஏன், பதினெட்டு கூட இருக்கும். இரண்டு மாதத்தில் பட்டம் வாங்கிக் கொண்டு மேல்படிப்புக்குப் போகப் போகிறவன். நீச்சல் டீமில் கேப்டனாயிருக் கிறான்....''

''இருக்கட்டுமே? அதனால் பெரிய ஆளாய் ஆகிவிடுவானா?'' என்ற க்ளோ தோழியை ஏற இறங்கப் பார்த்து, ''நீ எத்தனை அழகாக இருக் கிறாய்? உன்னை வெளியே அழைத்துப் போக அவன் அதிர்ஷ்டம் பண்ணியிருக்கணுமாக் கும்!'' என்றாள். ஆனால் ஆலிஸனுக்கு ஏற் பட்ட பயம் அவளுக்கும் ஏற்பட்டிருந்தது. பிலிப்பும் ஜேம்ஸும் வெறுமே கலாட்டா

பண்ணியிருப்பார்களோ என்று அவளுக்கும் கலக்கம் உண்டாயிற்று.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், தெருமுனையில் காரின் விளக்கு வெளிச்சம் தெரிந்தது. ஒரு மெர்ஸிடிஸ் கார் அவர்களை நோக்கி வந்து டக்கென்று நின்றது.

பிலிப்தான் காரை ஓட்டி வந்தான். ஜேம்ஸ் அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். இருவருமே ஷர்ட்டும் கோட்டும் அணிந்து டையும் கட்டிக் கொண்டிருந்தார்கள். 'என்ன அழகாயிருக்கிறார்கள்!' என்று அவர்களைப் பார்த்தவுடனே தோழிகள் இருவரும் நினைத்துக் கொண்டார்கள்.

ஆலிஸனைப் பார்த்துப் புன்னகை செய்தான் பிலிப். "லேட்டாகி விட்டது, ஸாரி. காருக்கு டீஸல் போட வேண்டியிருந்தது. ஆனால் டீஸல் விற்கிற பங்க் ஒன்று கூட அகப்படவில்லை" என்றான்.

ஜேம்ஸ் இறங்கி வந்து பின் ஸீட் கதவைத் திறந்து அவளை ஏறிக் கொள்ளச் சொல்லி, தானும் ஏறிக் கொண்டான். க்ளோவின் மயக்கும் அழகு அவனைச் சொக்க வைத்து விட்டது.

ஆலிஸன் பிலிப்பின் அருகில் உட்கார, "ஸீட் பெல்ட்டுகளை எல்லாரும் போட்டுக் கொள்ளுங்கள். ப்ளீஸ்," என்று மிடுக்காகக் கூறிவிட்டு, ஓட்டலை நோக்கிக் காரைச் செலுத்தலானான் அவன்.

பதினெட்டு வயதைத் தாண்டிய பெரியவர்களைப் போல ஒரு பெருமிதம் அந்த நான்கு பேர் நெஞ்சிலும் நிறைந்தது.

என்னவோ பல வருடங்களாகப் பழகியவர்கள் போலவும், எத்தனையோ தடவை இதுபோல ஓட்டல்களுக்குச் சேர்ந்து சென்றவர்கள் போலவும் பின் ஸீட்டில் ஜேம்ஸும் க்ளோவும் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் ஆலிஸனுக்கும் பிலிப்புக்கும் கூச்சம். மெதுவாகப் பேசிக் கொண்டார்கள்.

"உனக்கு இந்த டிரெஸ் ரொம்ப நன்றாயிருக்கிறது," என்றான் பிலிப்: சற்றுத் தயங்கிய பின், "நீ வருவாயோ மாட்டாயோ என்று நினைத்தேன். வந்ததில் சந்தோஷம்," என்றான்.

"எனக்கும்தான்," என்றாள் ஆலிஸன்.

"இப்படி நீ பையன்களோடு வெளியே போவது உன் வீட்டிலே பிடிக்காதா? அல்லது பையன்களுடன் காரிலே போகிறதென்றால் பிடிக்காதா?" என்று பிலிப் வெளிப்படையாகக் கேட்டான்.

'என் வீட்டில் எனக்கு நல்ல சுதந்திரம் உண்டு. எதற்குமே ஆட்சேபம் சொல்ல மாட்டார்கள்,' என்று கூறவே ஒருகணம் நினைத்தாள் ஆலிஸன். ஆனால் பிலிப்பை அவளுக்குப் பிடித்து விட்டது. நல்ல பையன். இவனிடம் பொய் பேசாமல் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உதித்தது. நாணத்துடன் புன்னகை செய்து, "பையன்களுடன் போவது, காரில் போவது இரண்டுமே என் அம்மா அப்பாவுக்குப் பிடிக்காது. சுத்தக் கிறுக்குத்தனமான கட்டுப்பாடு!" என்றாள்.

"அப்படியில்லை. அவர்கள் சொல்வதும் ஒருவகையில் நியாயம்தான்," என்றான் பிலிப். "ஆனால் நான் ரொம்ப ஜாக்கிரதையாகக் கார் ஓட்டுவேன். எனக்கு ஒன்பது வயதானபோதே என் அப்பா எனக்குக் கார் டிரைவிங் கற்றுக் கொடுத்துவிட்டார்," என்றவன், ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தபடி, "ஒருநாள் நான் உன் வீட்டுக்கு வந்து உன் அப்பா - அம்மாவைச் சந்தித்தால் ஒருகால் எல்லாம் சரியாகி விடும்," என்றான்.



"சாப்பாட்டை ஜீரணிக்க முடியலைன்னு உங்ககிட்ட டிரீட்மென்ட் எடுத்துட்டுப் போனேனே டாக்டர்..."

"அதுக்கு என்ன இப்ப?"

"அதுக்கு நீங்க வாங்கின பீஸை என்னால் ஜீரணிக்க முடியல டாக்டர்!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

"ஓ, கட்டாயம் வா," என்றாள் ஆலிஸன். தங்கள் நட்புக்கு அப்பா அம்மாவின் அங்கீகாரத்தைப் பெற வேண்டும் என்பதில் அவன் காட்டும் ஆர்வம் அவள் மனத்தை நெகிழச் செய்தது.

பின் ஸீட்டில் க்ளோவிடம் ஜேம்ஸ் தன் நீச்சல் வெற்றிகளைப் பற்றி என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தான். அதிலே பாதிக்கு மேல் வெறும் அளப்பு என்று பிலிப்புக்குத் தெரியும். சிரிப்பை அடக்கிக் கொண்டு குறுக்கிடாமல் இருந்தான்.

ஓட்டலை அடைந்ததும் பிலிப் ஒயின் கொண்டு வரச் சொல்லி ஆர்டர் கொடுத்தான். ஆலிஸன் அதை எதிர்பார்க்கவில்லை.

(தொடரும்)

## இதோ சுலபமான முறை - எதிர்காலத்தை திட்டமிட

### அறிமுகப்படுத்துகிறோம்

# டிஎல்வி சிட்ஸ்

மகத்தான முயற்சிக்கு மகிழ்ச்சிகரமான ஆரம்பம். புகழ்பெற்ற டிஎல்வி குரூப் வழங்கும் டிஎல்வி சிட்ஸ். பல்லாண்டுகளாக மக்கள் பயன்பெற்று வரும் சேமிப்பு முறையை உங்களுக்கு அளிக்கிறோம்.

பல்வகை திட்டங்களிலிருந்து தேர்ந் தெடுங்கள். வளமிகு வருங்காலத்திற்கு வழி காணுங்கள். உங்கள் குழந்தையின் திருமணம் அல்லது படிப்பு, உங்கள் வீடு அல்லது தொழிலுக்கான நிதித்தேவை ... அனைத்து சந்தர்ப்பங்களிலும் உங்களுக்கு உதவுகிறது டிஎல்வி சிட்ஸ். 20 ஆண்டுகளாக எங்கள் வெற்றிக்கு மூலகாரணமான நாணயத்தை ஆதாரமாகக் கொண்டது.

எதிர்காலத்தை பற்றிய கவலை விலக, இன்றே எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

**சந்தாதாரர்களுக்கும் அறிமுகப்படுத்துவோருக்கும் வியப்பூட்டும் பரிசுகள்!**

| குரூப் குறியீடு | சீட்டுச் சந்தா (ரூ.)/ மாதங்கள்* | சீட்டு மதிப்பு (ரூ.) |
|---|---|---|
| A1 | 1,000 x 20 | 20,000 |
| A2 | 1,500 x 20 | 30,000 |
| A3 | 2,500 x 20 | 50,000 |
| A4 | 3,500 x 20 | 70,000 |
| A5 | 5,000 x 20 | 1,00,000 |
| B1 | 625 x 40 | 25,000 |
| B2 | 1,250 x 40 | 50,000 |
| S1 | 8000 x 25 | 2,00,000 |

* முன் அனுமதி பெறப்பட்டுள்ளது.




## டிஎல்வி சிட்ஸ் பிரைவேட் லிமிடெட்

54, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, புவனேஸ்வரி தியேட்டர் எதிரில், புரசைவாக்கம்,
சென்னை - 600 007. போன் : 5325311 / 5325312 / 5325313 ∴பேக்ஸ் : 91-44-5325363
**கிளைகள் : • தி.நகர் :** மாயாஸ் பிளாசா, 71 பாண்டி பஜார், சென்னை - 17. போன் : 8280036
**• ஆழ்வார்பேட்டை:** அல்சா ரீஜென்சி, 165 எல்டாம்ஸ் சாலை, சென்னை - 18. போன் : 459473/458789,
**• கெல்லீஸ் :** 142, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை 10. போன் : 6420506 / 07.

**எதிர்காலத்தை துணிவுடன் அணுகுங்கள்**

இந்தோட
ஆள் குளோஸ்....



1997 ஏப்ரல் 27
ஈசுவர சித்திரை 14
மலர் : 55
இதழ் : 39

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கவலை தரும் காவல்துறை!

ரமேஷ் என்கிற 23 வயது வாலிபரின் மரணம் குறித்து முரண்பட்ட விவரங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இளைஞர் அ.தி.மு.க. அனுதாபி என்பதும், காவல் துறையினருடன் அவருக்கு ஏற்பட்ட ஒரு மோதலைத் தொடர்ந்துதான் அந்த மரணம் நிகழ்ந்தது என்பதும் மறுக்கப்படாத உண்மைகள். ரமேஷின் அகால மரணத்தைத் தொடர்ந்து மயிலைப் பகுதியில் மக்கள் கொதித்தெழுந்திருக்கிறார்கள். அப்போது அடக்குமுறையைக் கையாள வேண்டிய நிர்ப்பந்தம் போலீஸுக்கு ஏற்பட்டிருக்கிறது.

ரமேஷின் மரணத்துக்குத் தாங்கள் காரணம் அல்ல என்கின்றனர் காவல் துறையினர். ரமேஷுடைய தந்தை அதை ஏற்காமல் புகார் செய்துள்ளார்.

தமிழக முதல்வர், தவறு நடந்திருக்க சாத்தியக்கூறுகள் இருப்பதை ஒப்புக் கொண்டிருக்கிறார். நீதி விசாரணைக்கு உத்தரவிட்டிருக்கிறார். தமது நேரடி பொறுப்பிலுள்ள காவல் துறைக்குச் சப்பைக்கட்டு கட்டாமல், முதல்வர் நடுநிலையுடன் செயல்பட்டது பக்குவத்தின் அறிகுறி.

நீதி விசாரணையின் இறுதியில்தான் காவல்துறை பேரில் குற்றம் உள்ளதா, இல்லையா என்பது வெளியாகும். ஆனால், அவர்களது அணுகுமுறையில் பல தவறுகள் உள்ளன என்பது மட்டும் தெளிவாகவே தெரிகிறது.

'மூன்றாவது கண்' நூல் வெளியீட்டு விழாவில் ராஜசேகரன் நாயர் சொன்னார்: "நேர்மை

## வை ராஜா வை




மட்டும் இருந்தால், எப்பேர்ப்பட்ட சக்திமிக்க அரசியல் தலையீட்டையும் தவிர்க்க முடியும்." உயர் மட்டத்தில் மட்டுமின்றி, காவல் துறையின் எல்லா நிலைகளுக்கும் இதுதான் அடிப்படை.

காவல் துறையினர், ஐம்பதோ அறுபதோ பெற்றுக் கொண்டு, குற்றவாளிகள் மீது நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிடுவது வெகு சகஜம்.

இந்தப் போக்கினால் பொது மக்களுக்குக் காவல் துறையினிடத்தில் துளியும் மரியாதை இல்லாமல் போய் விடுகிறது என்பதுடன், எப்படியும் அர்சியல் அல்லது பொருளாதார செல்வாக்கைப் பயன்படுத்தித் தப்பிவிடலாம் என்கிற எண்ணம் வலுப்பட்டு விடுகிறது.

காவல் துறையினரும், சட்ட ஒழுங்கைக் காப்பவர்களாக, பொது மக்கள் சேவையில் ஈடுபட்டுள்ளவர்களாகத் தங்களைக் கருதிக் கொள்வதில்லை. ஆட்சியிலிருக்கும் கட்சியின் சேவகர்களாகவே தங்களை எண்ணிப் பழக்கப்பட்டு விட்டனர்.

இந்த ஆரோக்கியமற்ற போக்கு ஒரு 'கலாசாரமாக'வே வேரூன்றி விட்டதால் காவல் துறையினரிடம் அகப்படும் 'எதிர்க்கட்சி' நபர்கள், விரோத பாவத்துடன் நடத்தப்படுகிறார்கள். இரு தரப்பினரையும் சம நோக்குடன் பார்க்கும் மனப்பாங்கு காவல் துறையினரிடம் இல்லை.

கலாட்டாவோ, அமைதிக்கு ஆபத்தோ ஏற்பட்டால், காவல் துறை துணிந்து வேகமாக இயங்கி, அதைக் கட்டுப்படுத்த வேண்டுமேயொழிய, அந்த கலாட்டாவுக்கே தான் ஒரு காரணமாக இருந்துவிடக் கூடாது.

ரமேஷின் மரணத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட கலவர நிலையைக் காவல் துறையினர் முறையாகவே அணுகி சரிசெய்திருக்கின்றனர். ஆனால், அப்படியொரு கலவர நிலை ஏற்படாமலே அவர்களால் தவிர்த்திருக்க முடியும் என்பதைத்தான் முக்கியமாகக் குறிப்பிட்டாக வேண்டும்.

சந்தேகத்துக்குரிய முறையில் உயிரிழந்திருக்கும் ரமேஷின் உடல் பிரேதப் பரிசோதனைக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. எனினும் பரிசோதனை அறிக்கை வெளியிடப்படவில்லை. இதில்






தாமதம் ஏன் என்பது உறுத்தலான கேள்வி. நீதி விசாரணையின் போது இவையெல்லாம் கருத்தில் கொள்ளப்படும் என நம்புவோம்.

காவல் துறையின் ஒற்றாடல் பிரிவு பலப்படுத்தப்பட வேண்டும், நவீனமயமாக்கப்பட வேண்டும் என்பதை நாம் பலமுறை எடுத்துச் சொல்லியிருக்கிறோம். குற்றத் தடுப்புக்கும் சட்டம் - ஒழுங்கு பராமரிப்புக்கும் ஒருங்கே உதவக்கூடியது இந்த நடவடிக்கை.

உயர்மட்டத்தில் மட்டுமின்றி, கடைநிலை வரை, காவல் துறைக்கான பயிற்சி முறைகளும் சீர்செய்யப்பட வேண்டும். காவல் துறைப் பணி, அரசாங்கப் பணி என்பதைவிட, மக்கள் பணியே ஆகும் என்பது பயிற்சியின்போதே வலியுறுத்தப்பட வேண்டும். ஆட்சியிலிருப்போருக்கு அஞ்சாமல் கடமையாற்றும் மனத் திண்மையும் பயிற்சியின்போதே புகட்டப்பட வேண்டும்.

பயிற்சி முறை சீர்திருத்தங்களுடன் பணிமுறையிலும் (டூடி நேரம் - காலம்; சம்பளம், சீருடை போன்றவை) சீர்திருத்தங்கள் கொண்டு வரப்படுமேயானால், காவல் துறை மட்டுமல்ல சமுதாயமே மேன்மையுறும்.

மூளையைக் கசக்கி, ஆராய்ந்து, புதிதாகத் திட்டம் போட்டுச் சீர்திருத்தும் அவசியமெல்லாம் இல்லை. போலீஸ் கமிஷன் ஏற்கெனவே கருத்தூன்றித் தயாரித்துள்ள அறிக்கையை எடுத்து, தூசு தட்டி அமுல்படுத்தினாலே போதுமானது.

இதை மேலும் காலதாமதமின்றி இப்போதேனும் செயல்படுத்துவது நல்லது. காவல் துறை சாண் ஏறினால் முழம் சறுக்கிவிடும் நிகழ்ச்சிகள் ஏராளம். ஆர்.எஸ்.எஸ். அலுவலக குண்டு வெடிப்பு வழக்கில் தேடப்பட்டு வந்த ராஜா ஹுசைனை அவர்கள் கண்டுபிடித்துக் கைது செய்திருக்கிறார்கள். இந்த வழக்கில் இது பெரிய திருப்புமுனையாக இருக்கக்கூடும் என்றாலும், மயிலாப்பூர் கலவரம் போன்ற பல நிகழ்ச்சிகள் நம் மகிழ்ச்சியைக் கணிசமாகக் குறைத்து கவலை தருகின்றன.

## திருப்பதிக்கு லட்டு



# “இதுவொரு பெரிய விஷயமாங்க!”

தினம் தினம் எத்தனையோ பேருக்கு முடி வெட்டிவிடும் கலைஞர்கள் தங்களுக்கு எங்கே போய் சிகையலங்காரம் செய்து கொள்கிறார்கள்? சென்னை மேற்கு மாம்பலம் தம்பையா தெருவிலுள்ள ஒரு முடிதிருத்தும் கடையில் வேலை பார்க்கும் ஈ. மூர்த்தி என்பவரிடம் கேட்டோம்.

"ஒரு நாளைக்கு இருவது, இருவத்தஞ்சு பேருக்கு நான் முடிவெட்டி, ஷேவிங் பண்ணறேன். எனக்கு முடிவெட்டிக்கறது பெரிய விஷயமா? நானே கூட வெட்டிக்குவேன். இல்லாட்டா, இந்த கடைலயே வேலை பார்க்கற வேற ரெண்டு பசங்கல்ல யாராவது ஒருத்தனை வெட்டச் சொல்லுவேன். பெரும்பாலும் இந்த மகேஸ்தான் வெட்டி உடுவான். இவனுக்கு ஒம்பது வருஷ சர்வீஸ் இருக்குது!" என்றார். மகேஷுக்குப் பதினேழு வயது.

"அதெப்படிங்க, உங்களுக்கு நீங்களே வெட்டறது? சரியா வருமா?"

"அதெல்லாம் கரெக்டா இருக்கும். பையனை வெட்டச் சொன்னாலும் நான் இன்ஸ்ட்ரக்ஷன் குடுத்துருவேன். இன்ன மாதிரி வெட்டு; இத்தனை தூரம் வெட்டுன்னு."

"நீங்க எத்தனை வருஷமா இந்தத் தொழில்ல இருக்கீங்க?"

"அஞ்சு வயசுலேருந்து. பரம்பரைத் தொழில் பாருங்க!"

"என்ன படிச்சிருக்கீங்க?"

"அதிகமில்லீங்க. ஏழாங்கிளாஸ் வரைக்கும்தான் படிச்சேன். படிக்கச் சொல்லவே தொழிலுக்கு வந்துட்டேன்."

"என்னிக்கானா, வேற எதாவது தொழில் செய்ய மாட்டமான்னு தோணியிருக்குங்களா?"

"அதெல்லாம் இல்லீங்க. இது சூப்பரான தொழில். மனுசன் முகத்துக்கு அழகு கூட்டறதே முடிதான். அதை கவனிக்கற வேலைன்னா சும்மாவா? இப்ப டாக்டர், இஞ்சினீயர் வேலை மாதிரிதாங்க இதுவும். முன்ன மாதிரி இல்லை. நல்லா மரியாதையாவே வாழ முடியுது. வருமானத்துக்கும் பஞ்சமில்லை. அப்புறம் என்னைப் பொருத்த வரைக்கும் வேலையை ரொம்ப ரசிச்சி செய்யறேங்க."

"விளக்கமா சொல்லுங்க."

"வர்ற கஸ்டமருங்கள்ல ரெண்டு விதம். ஒண்ணு, ஆச்சா போச்சான்னு வேகமா முடிச்சிட்டுப் போறவங்க. இன்னொண்ணு, நிதானமா, அழகா செஞ்சிக்கணும்னு விரும்பறவங்க. இந்த ரெண்டாவது டைப் ஆளுங்க வர சொல்ல, நமக்கு இன்ட்ரஸ்ட் ஜாஸ்தியாயிடுதுங்க. முன்னால வழுக்கை இருந்திச்சின்னு வெச்சிக்கங்க. இந்த கிரீம் போட்டு ஒரு பத்து நிமிஷம் ஆறவெச்சி, கழுவிட்டா முடி வளரும்; ஒரு ஆறு மாசம் செய்து பாருங்கன்னு சொல்லுவேன். பிறகு, தலை மசாஜ் பண்ணி விடவான்னு கேப்பேன். வர்றவங்க சந்தோசமா கோவாப்ரேட் பண்ணா நமக்கும் மூட் வந்துடும். நல்லா செய்து விடுவேன்."

"உங்களுக்கு வேற பொழுதுபோக்கு ஏதாவது உண்டா?"

"சோஷியல் சர்வீஸ்ல இன்ட்ரஸ்ட் உண்டுங்க. Police & Public Relationship development Committee-ல் மெம்பர் நான். (I.D.கார்டு காட்டுகிறார்.) சின்னச் சின்ன நலப்பணிகள் செய்யறதுண்டுங்க. முன்ன அரசியல்ல ஆர்வம் இருந்திச்சி. இப்ப இல்லை."

"எந்த கட்சி நீங்க?"

"அ.தி.மு.க."

"ஜெயலலிதா மேல வழக்குங்களெல்லாம் வந்ததால விலகிட்டீங்களா?"

"அட, அவங்க மேல வருத்தமில்லீங்க. அவங்க நல்லவங்கதான், என்னைப் பொறுத்தவரைக்கும். கட்சிக்காரங்க, உள்ளூர் பெருந்தலைங்க சரியில்லை. அதான் விலகிட்டேன்."

- ஔரங்கசீப்

படம் : ஸ்ரீஹரி



"நான் இந்த ஆபரேஷன்லே பிழைப்பேனான்னு பேஷண்ட் கேட்டார். டாக்டர் மூச்சு விடலை."

"அப்புறம்?"

"ஆபரேஷன் முடிஞ்சது பேஷண்ட் மூச்சு விடலை!"

– வெ. ராஜாராமன்



"உன்னால முடிஞ்ச அளவு பாலை ஸ்பின் செஞ்சாப் போதும். அதிகமா சிரமப்படாதேன்னு சொன்னேனே கேட்டியா?!"

– பாஸு

# பசுமை பாய்ச்சும் புதுசக்தி!

"ரயிலில் போகும்போது, இரு பக்கமும் உள்ள, மலைகளை, பள்ளத்தாக்குகளை, பசுமைகளைப் பார்த்து ரசித்துக் கொண்டே செல்கிறோம். ஒருவன் அதை ரசிக்காமல் போனால், இயற்கைக்கு எந்த நஷ்டமும் இல்லை. அவனுக்குத்தான் இழப்பு; அது போலத்தான் வாழ்க்கைப் பயணமும். ரயில் பயணத்தில் இலக்கை நாம் நிர்ணயிக்கிறோம்; வாழ்க்கைப் பயணத்தில் ஆண்டவன் நிர்ணயிக்கின்றான். ஆகவே சலனங்கள், சஞ்சலங்கள், கோப, தாபங்கள், சவால்கள், சறுக்கல்கள் ஆகியவற்றை அவை வந்த போக்கிலேயே ஏற்றுக் கொண்டு சமாளிக்கக் கத்துக்கணும்!" என்று கொஞ்சம் தத்துவார்த்தமாகப் பேசுகிறார் ஷாப்பர்ஸ் இன்வெஸ்ட்மென்ட் அண்ட் பைனான்ஸ் கம்பெனியின் சேர்மனான ஜி. மோகன். தெரியவில்லையா? 'ரெடி மணி' மோகன்தான்! வருடத்துக்கு நூறு கோடி ரூபாய் டர்ன் ஓவர் காட்டும் நிறுவனத் தலைவர்!

"1979-ல் சார்ட்டர்டு அக்கவுண்டண்டாக பிராக்டீஸைத் துவக்கினேன். ஸ்பென்ஸர் கம்பெனிக்கு ஆடிட்டராக இருந்த போது தான், அவர்கள் விற்கும் நுகர்வோர் பொருட்களுக்கு பெரிய மார்க்கெட் தேடித் தந்தேன். டீவி, பிரிஜ் என்று நடுத்தர மக்கள் கனவு கண்டு கொண்டிருந்த பொருட்களை வாங்குவதற்கு பைனான்ஸ் கொடுத்து, அதன் மூலம் கிடைக்கும் வட்டியிலும், ஸ்பென்ஸர் கொடுத்த கமிஷன் தொகையிலும் கால் ஊன்றி நின்றேன். அப்புறம் ஒரு கட்டத்தில் நானே நுகர்வோர்களுக்கான பொருட்களை விற்கும் ஷோ-ரூம்களைத் திறந்தேன். இன்று தென்னிந்தியாவில் 25 இடங்களில் எங்கள் ஷோ-ரூம் இருக்கிறது. எங்கள் கம்பெனி பங்கு மார்க்கெட்டில் லிஸ்ட் ஆகி இருக்கிறது. தொழில் துவங்கிய இந்த 14 ஆண்டு காலத்தில், எனக்கும் எல்லாவித சவால்களும் வந்தன. எல்லாவற்றையும் டென்ஷனாகாமல் சமாளித்தேன். எப்படி என்கிறீர்களா?"

"டென்ஷன் எப்போது வரும்? ஏதாவது எதிர்பார்த்து ஏமாந்தால் வரும். நினைத்தது நடக்கவில்லையென்றால் வரும். சரியான பிளானிங் இல்லாட்டி வரும். ஒருவரை சரியா புரிஞ்சுக்காட்டா வரும். கீழேயிருப்பவர்கள் தப்புப் பண்ணினா வரும். ஆனா அதுக்கெல்லாம் இடம் கொடுக்காம இருக்க முயற்சி செய்யலாமே! ஏதோ பெரும் பிழை நடந்து விட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். ஏன் நடந்தது; எப்படி நடந்தது என்று ஆராய்ச்சி செய்து கொண்டிருக்காமல், பிழையால் ஏற்பட்ட பாதிப்புகளை குறைக்க முதலில் முயற்சி செய்யணும். வங்கியில் நாளை ஒரு பெரிய தொகைக்கு ஓ.டி. வேண்டும் என்றால் முதல் நாளே மானேஜரிடம் உறுதிசெய்து கொள்ள வேண்டும். கடைசி நிமிஷத்தில்



## சவால்

## பள்ளத்தாக்கு!

போய் நின்று அவரையும் டென்ஷனாக்கி,. நாமும் டென்ஷனாகக் கூடாது! அடுத்தபடியா, நம்முடைய நிறை, குறைகளை நாம் தெரிஞ்சுக்கிட்டோம் என்றால் மற்றவர்கள் மேல் கோபம் வராது."

"மனசை ரிலாக்ஸ் பண்ணுவதற்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?"

"சரியா கேட்டீங்க; உங்க நண்பனும், எதிரியும், உங்க மனசுதான். ஆறு மணி டில்லி பிளைட்டை பிடிக்கணும்னா கூட, மூன்று மணிக்கு எழுந்து ஒரு மணி நேரம் என் வீட்டிலுள்ள ஜிம்மில் கடுமையான உடற்பயிற்சி, அரை மணி நேரம் பூஜை ஆகியவற்றைச் செய்து விட்டுத்தான் புறப்படுவேன். கடுமையான உடற்பயிற்சிக்கு அப்புறம் என் மனசு ரொம்ப ரிலாக்ஸ்ட்டாக மாறி விடும். அமைதி - சாந்தம் குடிகொள்ளும். இப்படியொரு நிலையில்தான் மூளை என்ன அற்புதமாக வேலை செய்கிறது தெரியுமா!" என்று சொல்லும் இவர் சமீப காலங்களாக கால்ப் (golf) புல்வெளிகளிலும் நேரத்தைச் செலவிடுகிறார்.

"காஸ்மோபாலிட்டன் கிளப்பில் தாற்காலிக மெம்பர்ஷிப்பை நிரந்தரமாக்கிக் கொள்ள கால்ப் கற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. மைதானத்தில் நுழைந்த பிறகுதான், 'ஐயோ இத்தனை நாள் இங்கு வராமல் இருந்து விட்டோமே' என்று மனது அடித்துக் கொண்டது. காரணம் அந்த பரந்த பச்சைப் புல்வெளிதான். அந்தப் பசுமை மனத்துக்குள் பாய்ச்சும் சக்தி ஏராளம். அந்தப் புல்வெளியில் நடக்கும் போது மனசு இலேசாகி விடுகிறது. 'குழியை' நோக்கி முன்னேறும்போதே தொழில் நண்பர்களுடன் பிஸினஸ் பேச முடிகிறது. தினசரி மாலை மூன்றரை மணியிலிருந்து ஆறு மணி வரை புல்வெளியில்தான் வாசம். அந்த இயற்கையான சூழலில் மறுநாள் செய்ய வேண்டிய பணிகள் எண்ணத்தில் வலம் வர, 'எது, ஏன், எப்படி?' என்கிற தொழில்ரீதியான எல்லா கேள்விகளுக்கும் விடை தயாராகி விடுகிறது.

- ஸ்ரீநிவாசன்

# ஹுசைன் - மாதுரியின் புதிய கூட்டணி!

## மூழ்காத ஷிப்!

முன்னொரு முறை, அமிதாப் வீட்டில் தாக்கரேவுடன் கௌடா 'டின்னர்' சாப்பிட்டதை ஜனதாதளக்காரர்களாலேயே ஜீரணிக்க முடியவில்லை! இப்போது தாக்கரே-கௌடா நட்பு, பி.ஜே.பி.க்காரர்களின் தூக்கத்தை விரட்டி, காங்கிரஸ் காரர்களின் வயிற்றைக்





கலக்கியிருக்கிறது! நம்பிக்கை வாக்கெடுப்பின்போது தாக்கரே தாவி விடுவாரோ என்ற உதறலில், பி.ஜே.பி.க்காரர்கள் முன்னெச்சரிக்கையாக ''சேனாவுடன் எங்கள் கூட்டு மஹாராஷ்ட்ரா அளவில்தான்'' என முனகிக் கொண்டேயிருந்தார்கள். ஆனாலும் சிவசேனைக்காரர்கள் கௌடாவை ஆதரிக்கவில்லை. "நட்புக்காக பதவியைத் தியாகம் செய்ய யு.எஸ். ஒன்றும் 'மூழ்காத ஷிப்' இல்லையே?'' என்று கண் சிமிட்டுகிறார், தொலைபேசியில் நெடுநேரம் தாக்கரேயுடன் பேசிய அத்வானி!

## ஃபெவிகால் வார்த்தைகள்!

"தத்தா சாமந்த் கொலை வழக்கில் கைதாகியிருப்பவர்கள் 'டம்மி'தான்; அசல் கொலையாளிகள் இவ்வளவு சீக்கிரத்தில் குற்றத்தை ஒப்புக் கொள்ளமாட்டார்கள்" என்று சரத்பவார் குற்றம் சாட்டினார். இது விவகாரமாகிவிட, மாநில பட்ஜெட் சம்பந்தமான விவாதம் நடந்து கொண்டிருந்தபோது, துணை முதல்வர் கோபிநாத் முண்டேயைப் பேசவிடாமல் எதிர்க்கட்சிக்காரர்கள் கோஷமிட்டனர். அப்போது முண்டே, "எல்லோரும் தத்தமக்குப் பரிச்சயமான துறையைப் பற்றித்தான் பேசுவார்கள். என்னால் போலீஸ் துறையின் நடவடிக்கைகளைக் குறித்துப் பேச இயலும். சரத்பவாருக்கோ அண்டர்வர்ல்ட் இயக்கத்தைப் பற்றி இயல்பாகப் பேச முடிகிறது!" என போட்டாரே ஒரு போடு! ஃபெவிகால் போட்டது போல் காங்கிரஸ்காரர்களின் வாய் 'கப்சிப்' ஆகிவிட்டது!

## 'பேஷண்ட்' சண்டை

சாதாரணமாக, எல்லா தனியார் மருத்துவ மனைகளிலுமே, 10% இலவசமாகவும், 10% குறைந்த செலவிலுமாக மருத்துவ வசதிகள் செய்து தரப்பட வேண்டும். சுகாதார அமைச்சர் தவுலத்ராவ் அஹேர், இனி இந்தச் சலுகைகளைப் பெறக் கூடியவர்கள் யார் என்பதை, அரசால் நியமிக்கப்பட்டிருக்கும் ஒரு கமிட்டி நிர்ணயிக்குமென அறிவிக்க, ஆஸ்பத்திரிகாரர்கள் எல்லாம் அடித்துக் கொள்கிறார்கள்! காரணம், "தனியார் மருத்துவ மனைகளில் சலுகைகளை அனுபவிப்பது டாக்டர், நர்ஸ்களின் உறவுக்காரர்களும், 'பெரிய இடத்து' சம்பந்தம் உடையவர்களும் தானே?" என்கிறது அரசு! "அங்கே என்ன வாழ்கிறதாம்? 'இலவச' இதயச் சிகிச்சைக்கு அரசு மருத்துவ மனைகளில் வாங்கும் தொகை ரூ.25,000!' என்கின்றனர் 'பிரைவேட்'காரர்கள். இந்தப் 'பணக்கார' ஏழைகள் ஒருவருக்கொருவர் மோதிக் கொண்டு, உண்மையான ஏழைகளை வழக்கம்போல் தெருவில் நிற்க விடப்போகிறார்கள்!

## எம் ஃபார்...?

மருமகன் ரீமா, மாமனார் ஹுசைனை இயக்குகிறார் 'பண்டர்பூர் கா ஏக் லட்கா' என்ற படத்துக்காக! மும்பைத் தெருக்களில் தாயில்லாப் பிள்ளையாய்த் திரிந்து, பின் லண்டனில் சுற்றி அலைந்து பெயிண்டரான கதையை எம்.எஃப் ஹுசைன் சூத்திரதாராகச் சொல்ல, இந்த தாடிக்கார ஹீரோவின் சுயசரிதை ஃபிலிம் சிடியில் படமாகிறது. தயாரிப்பு – எம்.எம்.கிரியேஷன்ஸ்; ஒரு எம் ஃபார் மக்பூல் (எம்.எஃபிலுள்ளது); மற்றொன்று? ஹி..ஹி.. உங்கள் ஊகம் சரிதான், மாதுரி!.

## அட, ஆண்டவா!

லாரி ஸ்டிரைக்கினால் அதிகமாக பாதிக்கப்பட்டது ஆண்டவன்தான்! தேங்காய் விலை ரூ.21; வாழைப்பழம் டஜன் ரூ.25! இதனால் பல கோயில்களில் அர்ச்சனைகளே நின்று விட்டன. சிலவற்றில், தேங்காயின் இடத்தில் ஒரு நோஞ்சான் ஆரஞ்சு வீற்றிருந்தது!

## சம்பளம் இரண்டு ரூபாய்; அபராதம் பத்து ரூபாய்!

பிளஸ் டூ பேப்பர்களைத் திருத்தும் ஜூனியர் காலேஜ் ஆசிரியர்கள், 'தனி ஒருவர் 300க்கு மேற்பட்ட விடைத் தாள்களை திருத்த முடியாது' என அண்மையில் போராட்டம் நடத்தினர். சாதாரணமாக, ஐநூறுக்கு மேற்பட்ட பேப்பர்கள் ஒருவர் மீதே திணிக்கப்படுவது வழக்கமாம்! நிறைய வேலை கிடைத்தால் நிறைய சம்பாதிக்கலாமே என்றுதானே நினைக்கிறீர்கள்? ஒரு வினாத்தாள் திருத்தக் கிடைக்கும் ஊதியம், வெறும் இரண்டே ரூபாய்தான். இந்த அழகில், ஒரு தவறு செய்தாலும், ஃபைன் பத்து ரூபாய். எத்தனை ஆசிரியர்கள் பேப்பரையும் திருத்தி தண்டமும் அழுகிறார்களோ?

## குண்டர் கிளப்!

சரிந்த தொந்தியுடன் பணக்காரத் தனத்தை இப்போதெல்லாம் யாரும் இணைப்பதில்லை! வியாதியின் அறிகுறியாகவே காண்கிறார்கள்! மும்பையின் ஜனத்தொகையில் 30சதத்துக்கு அதிகமாகக் காணப்படும் இந்த 'குண்டர்'களுக்கென்றே, டாக்டர் ராஜீவ் டெண்டுல்கர், முதன்முதலாக ஒரு "Mumbai Fat club" ஆரம்பித்திருக்கிறார். வயது, உயரத்துக்கேற்ப இருக்க வேண்டியதைக் காட்டிலும், 25 சதம் அதிக எடையுள்ளவர்களுக்கு இங்கே அனுமதியுண்டு! தம்மையொத்த தடியர்களைச் சந்தித்து, அளவளாவி, இருக்கும் அல்லது வர இருக்கும் உடல் கோளாறுகளை சாத்வீகமான உணவு முறையின் அடிப்படையில் குணப்படுத்துவதே இவர்கள் நோக்கம்.

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

## வெளிச்சத்தின் விலாசம் - 3

# வலம்புரி ஜான்



தோட்டத்திலிருந்து ஆதிமனிதன் தூக்கியெறியப்பட்ட பிறகு, துன்பம் அவனுக்குத் தொடர்கதை ஆனது. மனிதன் தீமைகளின் திரட்சி ஆனான். அப்போதும் அவனது பாவகரமான 'செயல்கள்'தான் மற்ற மனிதர்களுக்குப் பதைப்பை உண்டாக்கின.

மனத்தளவில் மனிதன் என்ன எண்ணுகிறான் என்று அறிந்துகொள்ளுகிற மனமானி அப்போதும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கவில்லை. மனிதன் இன்னதுதான் நினைக்கிறான் என்பதை மற்றவர்களால் கண்டு

பிடிக்க முடிந்திருக்குமென்றால் மனிதன் சிறகுகள் முளைக்காத தேவ தூதனாகவே சிறந்திருப்பான். தீய செயல்களுக்குத் தண்டனை கிடைப்பதால் சிறைச் சாலைகள் பூமியின் தேமல்களாயின. தீய எண்ணங்களுக்கெல்லாம் தண்டனை தருவதென்றால் பூமியே சிறைச் சாலையாகப் புரண்டிருக்கும்.

கடவுள் மனிதனின் மனத்தில் புரளும் எண்ணங்களைப் பார்க்கிறவராக இருக்கிறபடியால் மனிதர்கள் திரும்பத் திரும்பப் புரண்டார்கள். இது கடவுளுக்குக் கவலையைத் தந்தது. ஆராதிக்க வேண்டிய அழகெல்லாம் அனுபவிப்பதற்கே என்று ஆனது. மைக்காத் தகட்டில் மயிலிறகு நடனம்போல் பூமியைக் கௌரவப் படுத்திய பூவைகளையெல்லாம் மனைவி மார்களாக்கிப் பார்ப்பதிலேயே மனிதர்கள் மகிழ்ச்சி கொண்டார்கள். எல்லாக் கிளிகளின் அழகும் தூரத்திலேயே தொலைந்து போனது.

# வானவில் நிரந்தரமானது

அவனது தீமையின் ஊற்றுக்களைத் தெளிவாகவே அறிந்திருந்தார். சாக்கடைக் குளிரில் சலனசஞ்சாரத்திலேயே புளகித்துப் போகிற எருமைகளைப்போல் தீமைகளிலேயே ஆயிரம் ஆண்டுகள் வாழ்வதற்கு ஆசிர்வதிக்கப்பட்ட மனிதன். இனி நூற்றி இருபது ஆண்டுகளே வாழ்ந்திருப்பான் என்று இறைவன் கொதித்தான்.

அப்போது கடவுள், தாம் படைத்த உலகத்திலிருந்த உயிர்கள் அனைத்தையும் உறிஞ்சிக் கொள்ளுவது என்கிற முடிவிற்கு வந்தார். மனிதனை உலகத்தில் படைத்து உலவ விட்டதற்காகவே ஆண்



# இது வல்லவோ சாதனை!

டவர் வருத்தம் கொண்ட போது, நோவா என்கிற நல்ல மனிதனைப் பற்றிய சிந்தனை அவருக்குள் நிழலாடியது. நொடிப் பொழுதில் தேவன் நோவாவின்முன் தோன்றினார்.

ஆண்டவர் வெள்ளத்தால் பூமியை மூழ்கடிக்கப்போவதையும் அதிலிருந்து நோவாவும் அவனது குடும்பத்தாரும், தேர்ந்தெடுக்கப்பட்ட பிற உயிரினங்களும் எவ்வாறு தப்புவது என்றும் தெளிவுபடுத்தினார்.

ஆண்டவரை நேருக்கு நேராகத் தரிசித்த நோவா அவர் சொன்னபடியே பிரளயம் வரப் போகிறது என்று பிரஸ்தாபித்தார். தீமையில் நிலைத்திருந்த மனிதப் பூச்சிகள் அவரைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

நோவாவோ தன் அணு ஒவ்வொன்றிலும் ஆண்டவரின் ஆவியை நிரப்பிக் கொண்டார். கோபர் மரத்தால் ஒரு கப்பலைச் செய்தார். அதில் மூன்று அடுக்குகளையும், பல் வரிசைகளைப் போன்ற அறைகளையும் அமைத்தார். வெள்ளம் புகுந்துவிடாதவாறு கப்பலின் வெளிப்பாகத்தை கீலால் குளிப்பாட்டினார். அந்தக் கப்பலின் மேல்தளத்தில் ஒரு கூரை அமைத்தார்.

முந்நூறு முழ நீளத்திலும், ஐம்பது முழ அகலத்திலும், முப்பது முழ உயரத்திலும் அந்தக் கப்பல் அமைக்கப்பட்டது. உலர்ந்த கட்டைகள் ஒன்றுகூடி உயிர் பெற்றதுபோல நோவாவின் பேழை ஒரு உயரமான மலையில் நின்றது. ஆணும், பெண்ணுமாகத் தக்க விலங்குகளிலிருந்து ஏழு சோடிகளையும், தகாத விலங்குகளிலிருந்து ஒரு சோடியையும், பறவைச் சாதிகளிலிருந்து ஆணும், பெண்ணுமாக ஏழேழு சோடிகளையும் நோவா தனது பேழைக்குள் பிரவேசிக்கப் பண்ணினார். எல்லோருக்குமான உணவுப் பொருட்களும் உள்ளேயே சேமிக்கப்பட்டன. இறுதியாக நோவாவும், அவனது இல்லாளும் சேம், காம், எப்பேத்து என்ற அவர்களது ஆண் மக்களும் அவர்களது மனைவிமார்களும் அந்தப் பேரின்பப் பெட்டகத்திற்குள்ளே புகுந்தார்கள்.

நோவா நுழைந்தபோது எல்லாம் நிறைவாயிருக்கக் கண்டார். ஒரு மாடப்புறா தன் இச்சையின்படியே மேலே அமைக்கப்பட்டிருந்த கூடாரத்தில் இடம் தேடிக் கொண்டிருந்தது. தங்கத்தைக் காலால் தள்ளினாலும் தவிட்டை அலகில் அள்ளி வைத்துக் கொள்ளுகிற அந்தப் புறாவைப் பார்க்க நோவாவின் மனதில் அனுபவ முத்திரைகள் ஆழமாக இறங்கின.

நோவாவிற்கு அறுநூறு வயதானபோது, ஆண்டின் இரண்டாம் மாதத்தில் பதினேழாம் நாளன்று பாதாளத்தின் ஊற்றுக்கள் கட்டவிழ்க்கப்பட்டன. வானங்களின் மதகுகள் திறக்கப்பட்டன. நாற்பது இரவும், நாற்பது பகலும் மண்ணுலகில் பெருமழை பெய்தது! பொத்திலே வானமாக, பூமி வெள்ளத்தில் மூழ்கியது. ஆண்டவர் பேழையின் கதவுக்குத் தாளிட்டார்.

மழை வெள்ளம் கரைபுரண்டு மரம், செடி கொடிகளை மூழ்கடித்தது. மனித உடல்கள் மழைச் சேற்றில் புதைந்து அழிந்தன. காடைப் பறவைகள் கிளைகளில் கால் ஊன்ற இயலாமல் முடிந்த மட்டும் காற்றில் மூச்சுப் பயிற்சி செய்தன. அப்போதும் செத்து மிதந்த மீன்களைக் கொத்துவதிலேயே அவை குறியாயிருந்தன. பூமி முழுவதும் வெள்ளமாய் நிறைந்து விட்டபடியால் இந்தப் பறவைகளால் அதற்கும் மேலே பறக்க இயலாமல் பட்டங்களைப் போல் அறுந்து விழுந்து, நீரின் பரப்பிலேயே சலன சமாதிகளாயின.

பேழைக்கு உள்ளே இருந்தவர்களுக்கு மழையின் பேரிரைச்சல் கேட்டது. அவர்கள் அச்சத்தோடும், நன்றிப் பெருக்கோடும் தங்கள் கண்களை ஏறெடுத்தார்கள். "கர்த்தாவே! துதி, கனம், மகிமை எல்லாம் உமக்கே" என்று அவர்களது உதடுகள் உச்சரித்தன. தங்களது கப்பல் மேலேமேலே உயர்ந்து அசைவாடுவதை அவர்களால் உணர முடிந்தது. மலைகளுக்கும் மேலே பதினைந்து அடி உயரத்திற்கு மழை வெள்ளம் சலசலத்தது. நோவாவும் அவரது குடும்பத்தாரும் கீல் பூசப்பட்ட வெளிப்பாகத்தை ஊடறுத்து வெள்ளம் நுழைந்துவிடுமோ என்று அச்சப்படாமல், வார்த்தை மாறாத வல்லவரான தேவன் தனது உள்ளங்கைப் பள்ளத்தில் தங்களை எழுதியிருக்கிறார் என்றே நினைத்தார்கள். இப்படியாக நூற்றி ஐம்பது நாட்கள் வெள்ளப் பெருக்கில் பூமியின் தலை சுற்றியது.

இப்போது நோவாவையும் அவரோடு தான் பத்திரப்படுத்திய உயிர்களையும் கடவுள் நினைவுகூர்ந்தார். கடவுள் பூமியின் முகத்தில் காற்றை உலா வரச் செய்தார். பள்ளத்தாக்குகளின் ஆழ ஊற்றுகள் அடைக்கப்பட்டன. வானத்தின் மதகுகள் வல்லமையோடு மூடப்பட்டுவிட்டன. வெள்ளம் வடியத் தொடங்கியது. ஈர விரிப்பாக இருந்த பூமிப் பரப்பில் நுரைப் பூக்களின் நூதன சங்கீதம் மாத்திரமே களைகட்டியது.

ஏழாம் மாதத்தில், பதினேழாம் நாளன்று

துர்லவா என்ற பெயருடைய படிப்பறிவில்லாத இந்தப் பிச்சைக்காரருக்கு, திடீரென்று ஒருநாள் விதியை நினைத்துச் சலித்துக் கொண்டிராமல், சாதனை புரிய வேண்டும் என்று தோன்றி விட்டது! முப்பதாவது வயதில் ஒரு குளம் வெட்ட ஆரம்பித்தார். ஒரிஸ்ஸாவில் உள்ள ஒரு கிராமத்தில் வசிக்கும் இவர் இதற்காக 25 ஆண்டுகள் பாடு பட்டார்.



இப்போது வயதுக்கு மீறிய முதுமை என்றாலும் தண்ணீர் தளும்பும் குளத்தைக் கிராம மக்கள் நன்றியோடு பயன்படுத்துவதைப் பார்த்துப் பரவசமடைகிறார். கரையோர மரம், செடி புதர்களில் பறவைகள் வந்து தங்கி கீதமிசைப்பதைக் கேட்டு மகிழ்கிறார்.

முக்கியமான விஷயம்,' தனியொருவராகப் பாடுபட்டுக் குளம் வெட்டிய இந்த ஆண்டி பிறவியிலிருந்தே பார்வையற்றவர்.

— சேலம் சக்திக்கொடி

ஆதாரம் : வீக்

அரராத்து என்கிற மலையின் மீது நோவாவின் பேழை பாளையம் இறங்கியது. பத்தாம் மாதம் வரை வெள்ளம் குறைந்துகொண்டே வந்தது. அந்த மாதத்தின் முதல் நாளில் மலைகளின் உச்சிகள் தங்கள் ஈர மூக்காடுகளைக் கீழ் நோக்கித் தளர்த்தின.

அதற்கும் நாற்பது நாட்களுக்குப் பிறகு நோவா தமது கப்பலின் சாளரத்தைத் திறந்து வெள்ளம் வடிந்துவிட்டதா என்று அறிந்து வர கண்ணுக்கினிய கருநிறக் காகம் ஒன்றை அனுப்பி வைத்தார். அந்தச் சிறகு முளைத்த சின்ன இருட்டோ கால் பாவ இடமில்லாமல் போவதும் வருவதுமாக இருந்தது. பிறகு நோவா புறா ஒன்றை அனுப்பினார். அலகு படைத்த இந்த அஞ்சல்காரி தங்குவதற்கு இடம் இல்லாமல் பேழைக்கே திரும்பி வந்தாள். நோவா அதன் உச்சியை முகர்ந்தார்.

பிறகு ஏழு நாட்கள் காத்திருந்து, ஒரு புறாவை நோவா வெளியில் விட்டார். சாயரட்சை ஆனபோது அந்தப் புறா திரும்பி வந்தது. ஆனால் அதன் அலகில் ஒலிவமரம் ஒன்றின் துளிர் ஒன்று இருந்ததை அனைவரும் கண்டு ஆண்டவரைத் தோத்தரித்தார்கள். இன்னமும் ஏழு நாட்கள் காத்திருந்த பிறகு வேறொரு புறாவை நோவா அனுப்பினார். அது திரும்பி வரவே இல்லை. ஆகவே நிலப் பரப்பு ஏறத்தாழ உலர்ந்து விட்டது என்று நோவாவும், அவரது குடும்பத்தாரும் உறுதியாக அறிந்தார்கள்.

நோவாவிற்கு அறுநூற்று ஒன்று வயதான ஆண்டின் முதல் மாதத்தில் முதல்நாளில், வெள்ளம் தனக்கு விதிக்கப்பட்ட எல்லைகளுக்குள் உள்வாங்கிக் கொண்டது. மீதமான வெள்ளம் நிலப்பரப்பில் வளை தோண்டி வாழ ஆரம்பித்தது. நோவா பேழையின் மேற்கூரையைத் திறந்து பார்த்தார். அவரது விழிகள் சொர்க்கத் தீவுகளைப் போலச் சுடர் விட்டன. நிலமெல்லாம் உலர்ந்திருப்பதைப் பார்த்து நோவா மகிழ்ச்சியால் இறைவனைத் துதித்தார்.

இப்போதும் ஆண்டவர் நோவாவின் முன் தோன்றினார். ஆண்டவராகிய கர்த்தர் சொன்ன வண்ணமே நோவாவும், அவரது குடும்பத்தாரும் காப்பாற்றப்பட்ட உயிரினங்களும் பேழையின் வாயிலைத் திறந்து கொண்டு நிலப் பரப்பிற்கு வந்தார்கள். மண்ணில் குளிக்கிற குருவிகளோடு போட்டி போட்டுக்கொண்டு, எப்போது மண் தெப்பத்தில் இறங்குவது என்ற ஆசையோடு ஆண்டுக்கணக்கில் காத்திருந்து இன்றுதான் மணலை முத்தமிடுகிற விழுதுகளைப்போல உயிரினங்கள் பாதங்களால் நிலமகளை நீவின.

நோவா ஒரு மேடையிட்டு தகனப்பலி நிறைவேற்றி இறைவனுக்கு ஒப்புக் கொடுத்தார். கடவுள் களிப்படைந்தார். அப்போது இறைவன் 'பேழையிலிருந்து வெளிவந்த என் மக்களே, உயிரினங்களே, பல்கிப் பெருகுங்கள். இனி பிரளயத்தால் உங்களை அழிக்க மாட்டேன். மேகத்திற்கு மேலே எனது வில்லை வைப்பேன். எப்போதெல்லாம் வானவில் தோன்றுகிறதோ அப்போது பிரளயத்தால் உங்களை அழிக்க மாட்டேன் என்கிற எனது வாக்குத்தத்தத்தின் வரலாற்று அடையாளமாக அதைக் கொள்ளுங்கள்' என்றார்.

தோன்றி மறைகிற வானவில், ஆண்டவர் சதை உள்ள உயிர்களோடு செய்த உடன்படிக்கையின் அடையாளமாக நிரந்தரமானது. அழகிய வானவில்லைத் தாற்காலிகமாக்குவது விஞ்ஞானம். நிரந்தமாக்குவது மெய்ஞ்ஞானம்.

தள்ளாத வயதிலும் திராட்சைத் தோட்டங்களை வியர்வையால் விளையச் செய்த நோவா, தமது தொள்ளாயிரத்து ஐம்பதாவது வயதில் கல்லறையில் இடதுபுறமாகத் திரும்பிப் படுத்தார்.

(வளரும்)

# வைட்டமின் கதை-3

## பாரதி பாலன்

எல்லோரும் சிரித்தார்கள். சிரிப்பு என்றால் வெடிச்சிரிப்பு! படபட வென்று வெடித்துச் சிதறி, அறை முழுக்க எதிரொலிக்கின்ற சிரிப்பு. பொன்னுப்பாண்டிக்கு அப்படிச் சிரிக்க முடியவில்லை. அவன் அகராதியில் சிரிப்பு என்றால் வேறு. சிரிப்பு என்பது வெறும் ஒலியில் இல்லை. ஓசைகாட்டாது சிரிக்க வேண்டும். உதடு பிரியாது சிரிக்க வேண்டும். பளிச்சென்று முகம் முழுவதும் சிரிப்பைக் காட்ட வேண்டும். சட்டென்று முகத்தில் ரத்தம் ஏறி, காதுமடல் சிவந்து, கண்கள் சுருங்கி, யப்பா இதுதான் சிரிப்பு! செண்பகக் குழல்வாய் மொழி அப்படித்தான் சிரிப்பாள். சிரிப்பு என்றால் அதுதான் சிரிப்பு. உடம்பு மனசு எல்லாம் ஊடுருவுகிற சிரிப்பு. அப்படி இங்கு யாருக்குமே சிரிக்கத் தெரியவில்லை. படபடவென்று சிரிக்கிறார்கள். எதிலுமே ஒரு நளினம் இல்லை!



பொன்னுப்பாண்டி தலையை உயர்த்திப் பார்த்தான். சிரிப்பின் கடைசிச் சொட்டு ஒழுகிற்று. கலர் கலரான நவீன உடைகளில் அந்தக் கூட்டம். அது மேதைகள் கூட்டம். அவர்கள் அப்படிச் சொல்லிக் கொள்ளவில்லை. ஆனாலும் அலுவலகத்தில் எல்லோருக்கும் அப்படி ஓர் அபிப்பிராயம். ஜெனிஃபர், ஐ.ஐ.டி.யில் படித்தவள். ஃப்ளோரா சர்ச் பார்க் கான்வென்ட், நீலா யுனெஸ்கோ ப்ராஜெக்ட்டில் வேலை பார்த்தவள். ஷீலா யு.எஸ்.ஏ.வில் மேற்படிப்பு முடித்தவள். எல்லோருமே படிப்பில் ராட்சஷிகள். படிப்பு என்றால் சுய சிந்தனையைத் தூண்டும் படிப்பு அல்ல. வெறும் புத்தகப் படிப்பு. தடித்தடியான புத்தகங்களினால் மூளையைத் தீட்டி, சுய சிந்தனையை மழுங்கடித்து விட்டனர். வெறும் புத்தக வார்த்தைகளில் சேகரிக்கப்பட்ட அறிவு, அவர்கள் மூளையோடு மட்டும் நிற்பதில்லை. பல நேரங்களில் அது தலைக்கும் ஏறிவிடுகிறது.

பொன்னுப்பாண்டி அவர்களிடம் பலமுறை சிறுமைப்பட்டிருக்கிறான். அவனுடைய பெயரே அவர்களுக்குக் கேலிப் பொருள். பட்டிக்காட்டுப் பெயர் என்று ஆளாளுக்கு அந்தப் பெயரை உச்சரித்து எச்சில்படுத்தி விட்டார்கள். அவனும் அவர்களுடன்தான் இந்த அலுவலகத்திற்கு இன்டர்வியூவிற்கு வந்தான். இது அரசு நிதி உதவியால் செயல்படும் கல்வி ஆராய்ச்சி ஸ்தாபனம். பொன்னுப்பாண்டி கிராமத்தில் இருந்து நேரடியாக நகரத்திற்கு வந்தவன். இந்த அலுவலகச் சூழலும் ஆர்ப்பாட்டமும் அவனை அடக்கிற்று. மிரளும் கண்களுடன் நுனி சோபாவில் உட்கார்ந்து இருந்தான். இவர்கள் அப்படியல்ல. ஜெனிஃபர், ஃப்ளோரா, ஷீலா, நீலா எல்லோரும் கண்கள் படபடக்க தனித்

# அவள் எழுதிய கடிதம்

தனியாகத்தான் வந்தார்கள். இரண்டு மணி நேரம் காத்திருக்கும் நேரத்தில் அவர்களுக்குள் ஓர் முடிச்சு விழுந்தது. அப்படி ஓர் முடிச்சு அவர்களுக்குள் விழக் காரணம் அவர்களின் ஆங்கிலம். பொன்னுப்பாண்டி மிரண்டது அவர்கள் அறிவினால் அல்ல; ஆங்கிலத்தினால். பளபளவென்று கத்தி போல தீட்டி வைத்திருந்தனர் அவர்களின் ஆங்கிலத்தை.

அந்தப் பளபளப்பைப் பார்த்ததும் தான் பொன்னுப்பாண்டி மிரண்டு போனான்.

'நியூ கம்மர்ஸ் மீட்' என்று ஒரு சடங்கு. ஏ.சி. ஹால் முழுவதும் நிறைந்திருந்தது. அந்த அலுவலகத்தில் புதிதாகச் சேர்ந்தவர்கள் ஒவ்வொருவரும் செல்ஃப் இன்ட்ரடொக்ஷன் என்ற பெயரில் பம்மாத்துக் காட்டிக் கொண்டிருந்தனர். பொன்னுபாண்டியிடம் நிறைய விசயங்கள் இருந்தன. கிராமம், கிராமமாகச் சென்று கல்வி ஆராய்ச்சியில் ஈடுபட்டவன். இரவு பகலாய் அதிலே உழன்றவன். இவன் முறை வந்தது. எழுந்து நின்றான். கண் எதையோ காண்பித்தது. ஒருகணம் தடுமாறினான். குரல் சிக்கிற்று. மீண்டும் முயன்றான். குரல் உடைந்து குலைந்தது. எவ்வளவோ விஷயங்கள் மனத்

தில் நிழலாடின. எல்லாம் தொண்டைக் குழிக் குள்ளே வழுக்கிற்று. அன்று பெரிய அவமா னமாயிற்று!

அன்று இரவு -

அவனால் தூங்க முடியவில்லை. ஏதேதோ நினைவுகள் மனசைக் கொத்தின. பேசாமல் இந்த வேலையை விட்டு விடலாமா? வேறு வேலை கிடைக்குமா? எட்டு வருஷம் தவம் கிடந்து பெற்ற வேலை. தவிப்பிலும் தாகத்தி லும் உலர்ந்து கிடந்தவன் உதட்டில் ஒரு சொட்டு நீர். முடியவில்லை. உதற முடிய வில்லை. மனசு வலுவிழந்து வருகிறது. முன்பு போல் என்றால் பட்டென்று உதறியிருப்பான். இப்போது முடியவில்லை. முன்பு அவன் வாழ்க்கை முறையே வேறு. எதைப் பார்த்தும் அவன் பரவசப்பட்டதில்லை. இப்போது மனசு பொதி சுமக்கத் துவங்கியிருக்கிறது. அந்தப் பொதி செண்பகக் குழல்வாய் மொழி!



*"அந்த அரசியல்வாதியோட வக்கீல் இருந்தாலும் இப்படி பொய் சொல்லக் கூடாது."*

*"அப்படி என்ன சொல்லிட்டாரு?"*

*"'லஞ்சம் வாங்கினது அந்த அரசியல் வாதி இல்லை. 'க்ளோனிங்' முறையில் பிறந்த அவரது சகோதரர்னு' சொல்றார்."*

*—வெ. முருகானந்தம்*

தாமிரபரணியின் காலடியில் உள்ள ஒரு கிராமத்தில்தான் பாண்டி அவளைச் சந்தித் தான். சந்திப்பு என்றால் எதிரும் புதிருமான சந்திப்பு அல்ல. அங்கு ஒரு பள்ளிக்கூடம் உண்டு. தாமிரபரணிக் கரை ஓரம் ஒரு தோப்பு. தோப்பின் நடு வயிற்றில் பள்ளிக்கூடம். பார்க் கப் பார்க்க மனசு குளிரும். அப்பேர்ப்பட்ட பள்ளிக்கூடம். அங்குதான் பொன்னுப்பாண்டி ஆராய்ச்சியில் இருந்தான். அப்போதுதான் செண்பகக் குழல்வாய்மொழி 'யுனிசெஃப்' திட்டத்தில் ஒரு ஆய்வுக்காக அங்கு வந்தாள். அப்போதுதான் அவனைப் பார்த்தான். பார்த்தான் என்றால் விவரமாகப் பார்க்க வில்லை. இவன் ஏழாம் வகுப்பு வாசலில் நின் றிருக்கும் போது இவனைக் கடந்து எட்டாம் வகுப்பிற்குள் நுழைந்தாள். அப்போது அவள் கண் இடறியது. பிற்பாடுதான் அவளைப் பற்றி அறிந்தான் - அவளின் அறிவு, ஆர்வம் எல் லாம் கேள்விப்பட்டான். அதன் பின்புதான் அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வமும் குறுகுறுப்பும் கூடிற்று. அன்று கடைசி மணி அடித்ததும் அவளே இவனிடம் வந்தாள். மென்மையாக ஒருகணம் பார்த்தாள். பின்பு பாண்டியன் ஆய்வைப் பற்றிக் கேட்டாள். நிறையப் பேசினாள். அதற்குப் பிற்பாடு அவர் கள் அடிக்கடி சந்தித்துக் கொண்டனர்.

தாமிரபரணிக் கரையில் பள்ளிக்கூடத்தை ஒட்டி இடதுபக்கம் ஒரு நாகலிங்கப் பூ மரம் இருந்தது. மரத்தடியில் போய் நின்று விட் டாலே போதும் ஜில்லென்று ஒரு வாசனை. மனசை ஊடுருவுகின்ற வாசனை. செண்பகக் குழல்வாய் மொழியுடன் பாண்டி அந்த இடத் திற்கு வந்து விடுவான். காற்றும் கரையோடு போதும் தாமிரபரணியும் சுகம்தான்!

அவள் நிறைய பேசுவாள். கையைக் காலை ஆட்டிப் பேசுகின்ற ரக மில்லை. கையைக் கட்டிக் கொண்டு வாயைப் பொத்திக் கொண்டு எதிரே வந்து நின்று நிறைய விசயங்களைப் பேசி விட்டுப் போகின்ற ரகம். பாண்டிக்கு அவளைப் பார்க் கப் பார்க்க ஆச்சரியமாக இருந்தது. வேடிக்கையாகவும் இருந்தது. தாமிரபரணி மாதிரி அவர்களுக்குள் அந்த நட்பு தெளிவாய் ஓடிற்று. அது வெறும் 'அட்மிரேஷன்' இல்லை என்பது மட்டும் இருவருக்கும் புரிந்தது. அதை வெளிப்படுத்த அவர்கள் வார்த்தை தேடி வதைபடவில்லை.

"எம்ஃபில் முடிச்சுட்டு என்ன பண்றதா உத்தேசம் பாண்டி?"

"ஒரு வேலை தேடணும்."

"உங்களுக்கு நல்ல வேலை கிடைக்கும்."

அவன் சிரித்தான். சிரிப்பில் நகை ஓடியது.

"ஏன் சிரிக்கிறீங்க..."

"சுலபமாகச் சொல்லி விடலாம். அது சுலபமில்லை."

"அப்ளை பண்ணுங்கள். கிடைக்காமல் என்ன?"

அவன் கடகடவென்று சிரித்தான்.

அவள் சட்டென்று நின்றாள். முன்னால் வந்து விழுந்த சடையை அலட்சியமாகப் பின்னுக்குத் தள்ளினாள். அவளுக்கு அவன் சிரிப்பின் அர்த்தம் புரிந்தது.

"இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் எஜுகேஷன் அன் ரிசர்ச் சென்டர் - புதுடெல்லியில் இரண்டு போஸ்டிங் கேட்டிருக்காங்க. அப்ளை

## உங்கள் கூரை மேல் ஒரு குடை - வெப்பத்தை விரட்ட...



### உங்கள் வீட்டின் கூரைமேல்
### "ஜனதாசெம்" பூசிடுங்கள்

விடுகள், தொழிற்சாலைகள்,
மாட்டுத்தொழுவங்கள்,
கோழிப்பண்ணைகள், தங்குமிடங்கள்
ஆகியவற்றின் கூரைகளில் "ஜனதா செம்"
அடித்திடுங்கள்... பாருங்கள் மாயாஜாலத்தை.

"ஜனதாசெம்" வெப்பமான
சூரிய கதிர்களை உள்ளே
வரவிடாமல் பெரும்பாலும்
தடுக்கிறது. அதனால் உட்புறம்
குளிர்ச்சியாக இருக்கிறது.
"ஜனதாசெம்" எந்த வித
கூரைக்கும் ஏற்றது.



**ஜனதாசெம்®**

வெப்பத்தை தணித்திடுங்கள்.
'ஜனதாசெம்'
தேர்ந்தெடுங்கள்.

EFFICIENT/101/J/97

**நிறமும் தரமும் நிரந்தரம்**

பண்ணலாமே!"

"அவர்கள் கேட்கும் தகுதி இல்லை. அதுவும் டெல்லியில் போய்த் தாக்குப்பிடிப்பது கஷ்டம்."

"இப்போ புரியுது. இங்கு வேலை இல்லை என்பதல்ல பிரச்னை. வேலைக்கு அவர்கள் கேட்கும் தகுதிகள் கிராமத்துப் பட்டதாரிகளிடம் இல்லை. இதுதான் பிரச்னை. இது நமது குற்றமல்ல, நமது கல்வி முறையில் உள்ள கோளாறு."

பொன்னுப்பாண்டி மூக்கின் மீது ஆள்காட்டி விரலை வைத்தான். அவன் யோசனையில் மூழ்கிவிட்டான் என்று அர்த்தம். இது அவன் 'மானரிஸம்'. செண்பகக் குழல்வாய்மொழி அவன் மானரிஸத்தை ரசித்தாள்.

"அதுக்காக நாம சோர்வு அடையக் கூடாது பாண்டி. நம்பிக்கைதான் வாழ்வின் ஆதாரம்."

"வாழ்க்கை நழுவி நழுவிச் சறுக்கிக் கொண்டிருக்கும்போது, நான் எந்த நம்பிக்கையில் நிற்பது?"

"ஒரு விஷயத்தைப் புரிந்து கொள் பாண்டி. நழுவுவது வாழ்க்கையோட இயல்பு என்றால், ஊன்றி நிற்பது மனிதனோட இயல்பாக இருக்க வேண்டும்."

"ப்ச! பேசலாம் செண்பகம். முடியலை."

பேசிக் கொண்டே தாமிரபரணிக் கரையில் நடப்பார்கள். அவளின் ஒவ்வொரு வார்த்தையையும் கொஞ்சலாம். அப்படித் தேர்ந்தெடுத்துப் பேசுவாள். பேசிக் கொண்டே வெகுதூரம் நடந்து திரும்புவார்கள். எங்கோ வெகு தூரம் – தொடுவானைத் தொட்டு விட்டுத் திரும்பிய திருப்தியும் களைப்பும் இருக்கும்.

பாண்டிதான் செண்பகக்குழல்வாய்மொழியிடம் 'ஐ லவ்யூ' என்று முதலில் சொன்னான். அந்த வார்த்தை செண்பகக் குழல்வாய்மொழியை நாணச் செய்யவில்லை. முகத்தில் வெட்கம் படரச் செய்யவில்லை. நகத்தைக் கிறச் செய்யவில்லை. பெருவிரலால் நிலத்தில் கோலம் போடத் தூண்டவில்லை. நாகலிங்கப் பூ மரத்தடியில்தான் பாண்டி இதைச் சொன்னான். அவள் சுழித்து ஓடும் தாமிரபரணியையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"ஐ லவ் யூ... செண்பகம்." – பாண்டி.

அவள் கண்கள் விரிந்தன. இடது விழியோரம் ஒரு முத்து. மெல்லிய பனி மொட்டு மாதிரி ஒரு முத்து பளபளவென்று திரண்டு நின்றது. பாண்டி அவள் கண்களைப் பார்த்தான். அவள் இமை நசுக்கி அந்த முத்து உடைந்து கோடாய் இறங்கிற்று.

"என்ன செண்பகம்?"

"அப்பாகிட்ட பேசுறேன்."

"மாட்டேனுட்டா?"

"பாஸிட்டிவாவே திங்க் பண்ண மாட்டீங்களா?"

"ஒரு பேச்சுக்குச் சொல்றேன். மாட்டேனுட்டா?"

"அப்புறம் பார்க்கலாம்."

"சொல்லு செண்பகம்."

"ஏதோ ஒரு நம்பிக்கை, அதுலதான் நாம ஓடிக்கிட்டிருக்கோம்."

"எங்க வீட்டை நான் பாத்துப்பேன்."

"பார்க்கலாம் பாண்டி."

**செ**ண்பகக் குழல்வாய் மொழி அப்பாவிடம் பேசுவதற்கான தருணத்திற்குக் காத்திருந்தாள். அதற்கெல்லாம் ஒரு தருணம் வாய்க்க வேண்டும். எட்டு நாள் கழித்து அந்தத் தருணம் வாய்த்தது. பின் வாசல் கதவை அகலத் திறந்துவைத்து அப்பா நடையில் உக்கார்ந்து இருந்தார். திமுதிமுவென்று காற்று வீட்டிற்குள் பாய்ந்தது. அப்பா ஒருகணம் மோதுகின்ற காற்றில் இறங்குவதும் மறுகணம் கையில் உள்ள திவ்யபிரபந்தத்தை மடியில் போட்டுக் கொண்டு அதன் முதுகை நீவிக் கொண்டிருப்பதுமாக இருந்தார். அம்மா தலையணைக்கு உறை தைத்துக் கொண்டிருந்தாள். அவள் ஒரு வாயில்லாப் பூச்சி! செண்பகக் குழல்வாய் மொழி அப்பாவிடம் தன் காதலைச் சொன்னாள். அப்பாவின் கச்சலான உடம்பு ஒருகணம் மேலும் கீழும் ஏறி இறங்கிற்று. அவ்வளவுதான். அப்பா உறுமல் காட்டவில்லை. விஷம் கக்கவில்லை. உடனே இருவரும் கீரியும் பாம்புமாய் உருவெடுக்கவில்லை. செண்பகக் குழல்வாய்மொழி அவருக்கு நேர் எதிரே உட்கார்ந்து இருந்தாள். ஒருவரை ஒருவர் ஜெயிக்க முயற்சி செய்யாமல் அவரவர் எல்லையில் அவரவர் இருந்தனர்.

"யாரும்மா அவன்?"

"பாண்டிப்பா. பொன்னுப்பாண்டி."

"நம்ம ஆளுங்களா?"

"தெரியலை."

"நம்ம ஊரா?"

"பக்கம். வீரவநல்லூர்."

"உத்தியோகம்."

"எம்மீயில் படிச்சுக்கிட்டிருக்கார். வேலை கிடைச்சிடும்."

"நீ படிச்ச பொண்ணு. விவரம் தெரிஞ்சவ. உனக்குத் தெரியாதது இல்லை. இது உன் வாழ்க்கை. நான் குறுக்கே நிக்க விரும்பலை. ஒரு கோடி காட்டுறேன். ஒண்ணுக்கு நாலு தடவை யோசனை பண்ணிச் செய்."

"பொன்னுப்பாண்டி, நல்ல மாதிரிப்பா..."

"அப்ப சரி."

**நா**லு மணி. அலாரம் பிளிறியது. சட்டென்று அதன் தலையில் ஒரு குட்டு. அமைதியாயிற்று. ஜன்னல் சதுரத்தில் இருட்டு மிதந்தது. மீண்டும் போர்வைக் கதகதப்பில் பதுங்கிக் கொண்டான் பொன்னுப்பாண்டி. எழ மனசில்லை. இதுவே இன்று ஞாயிற்றுக்கிழமை என்றால் இன்னேரம் சந்தோஷம் விழித்திருக்கும். இன்று அலுவலகம் போக வேண்டும். நினைக்கும்போதே கசப்பு ஊறியது. ஏனென்று தெரியவில்லை. மனசு உதறுகிறது. நம்பிக்கை நழுவுகிறது. அலுவலகத்தில் ஒரு ரிசர்ச் ரிப்போர்ட் கொடுத்தார்கள். நூற்றி முப்பது பக்கம். லேசர் பிரிண்ட். ஸ்பைரல் பைண்டிங். பார்க்கப் பளபளப்பாகத்தான் இருக்கிறது. தேரை உறிஞ்சிய தேங்காய் மாதிரி, உள்ளே ஒன்றுமில்லை. இதைச் சொல்ல முடியுமா? பனிச்சென்று முகத்தில் அறைந்த மாதிரி சொல்ல முடியுமா? கான்ஃபரென்ஸ் ஹாலின் நடுவில் நின்று கொண்டு ஆங்கில வார்த்தைகளில் பேச முடியுமா? கேள்வி வர அயற்சி கூடிற்று. ஊமைக் கனவை அடைகாப்பது போல் எத்தனை நாளைக்கு? உதட்டுக்கும் தொண்டைக்குள் இருந்துக் கொண்டிருப்பது? பேசாமல் இந்த வேலையை விட்டு விடலாமா? வேறு வேலை கிடைக்குமா? தேடலாம். சின்னதாய் சிரமமில்லாததாய் ஒரு வேலை தேடலாம். அங்கும் இதே போல் இருந்தால்? பொன்னுப்பாண்டிக்கு நம்பிக்கை பிரி அறுந்தது. வேண்டாம் – இந்த வேலையே வேண்டாம். விட்டு விடலாம். இது நம்மால் முடியாது என்று கையை உதறிவிட்டு ஊர்ப்பக்கம் போய் விடலாம். அங்கு போய் ஒரு வேலை தேடலாம். கிடைக்காவிட்டால் ஒரு பெட்டிக் கடை. எத்தனை நாளைக்கு நொண்டிக் கொண்டு

**நெருக்கம்!**

**வா**னத்திலிருந்து கடவுள் பூமிக்கு வந்து மனிதனைப் பார்த்தார். "பூமி எப்படி இருக்கிறது?" என்று கேட்டார்.

"மெய்ஞ்ஞானத்தில் பூமி தழைத்துக் கொண்டிருக்கிறது!" என்றான் மனிதன்.

பிறகு பூமியிலிருந்து மனிதன் வானத்துக்குப் போய்க் கடவுளைப் பார்த்து, "வானம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

"விஞ்ஞானம் என்னை நெருங்கிக் கொண்டிருக்கிறது!" என்றார் கடவுள்.

– 'கண்ணதாசன் குட்டிக்கதைகள்' நூலிலிருந்து : வி. சிவா



இருக்க முடியும். விருட்டென்று எழுந்தான். ஒரு காகிதத்தைக் கிழித்தான். செண்பகக் குழல் வாய் மொழிக்குக் கடிதம் எழுதினான். பரபர வென்று வெள்ளைக் காகிதத்தில் தன் மனசை இறக்கி வைத்தான்.

நாலாவது நாள் செண்பகக் குழல்வாய் மொழியிடம் இருந்து பதில் வந்தது. கனமான கடிதம். ஒரே ஒரு பக்கம்தான் எழுதியிருந்தாள், இருப்பினும் கடிதம் கனம்.

அன்பு பாண்டிக்கு,



தூரத்தில் தெரியும் தாமிரபரணியைப் பார்த்துக் கொண்டே உன் கடிதத்தைப் பிரித்தேன். தாமிரபரணித் தண்ணீர் குடித்து வளர்ந்த நீயா இப்படி எழுதினாய்? உனக்கு ஏற்பட்டிருப்பது வெறுப்பு அல்ல; பயம் – மிரட்சி. அது உன்னைக் கோழையாக்கிவிடும். இந்த உலகத்தில் எதைப் பார்த்தும் மிரட்சி கொள்ளாதே. எல்லாம் அதனதன் லட்சணப்படிதான் வாய்த்திருக்கிறது. இது நான் நான்கு வருடங்களுக்கு முன்பு கற்றுக் கொண்ட பால பாடம் – வாழ்க்கைப் பாடம்.

உன்னுடன் வேலை பார்ப்பவர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தாய், ஒன்றைப் புரிந்து கொள். பாண்டி, அவர்கள் காலங்காலமாய் படிப்பு, உத்தியோகம் என்ற நினைத்த குடும்பத்தில் இருந்து வந்திருக்கலாம். ஐ.ஐ.டி.யில் படிப்பு படித்திருக்கலாம். யு.எஸ்.ஏ.வில் மேற்படிப்புப் படித்திருக்கலாம். 'யுனெஸ்கோ'வில் வேலை பண்ணியிருக்கலாம். அது எல்லாம் லேபிள் மட்டுமே! ஆனால் அவர்கள் கிராம வாழ்க்கையிலும் கல்வி முறையிலும் அரிச்சுவடி ஆசாமிகள்தான். புத்தகங்களின் மூலம் எல்லாம் தெரிந்து கொள்ளலாம் என்ற மயக்கத்தில் இருப்பவர்கள். புத்தகங்களுக்கு வெளியே கண்ணால் பார்த்தும் காதால் கேட்டும் கற்றுக் கொள்ள வேண்டியவை நிறைய. ரத்தமும் சதையுமாய் நிறைய விஷயங்கள் உன்னிடம் உள்ளன. பாண்டி அதைப் புரிந்து கொள். அதுவே உனக்கு மிகப் பெரிய பலம்.

உன்னால் ஆங்கிலத்தில் பேச முடியாமைக்குக் காரணம், நீ லாயக்கில்லை என்பதல்ல பொருள். நம் கல்வி முறை. கிராமத்து ஆசிரியர்களின் போதனை முறை. முழுக்க முழுக்க அவர்கள் செய்த தவறுக்கு ஒரு தலைமுறை மொத்தமும் நாக்கில் சூடு போட்டுக் கொண்டு அலைவது துரதிர்ஷ்டம்தான். கிராமங்களில் படித்து வரும் பெரும்பாலான இளைஞர்களுக்கு ஆங்கில அறிவு குறைவு. இது தனிப்பட்ட ஒருவர் பிரச்னை அல்ல; இது ஒரு பொதுப் பிரச்னை. அந்தக் கோணத்திலே இதைப் பார்க்க வேண்டும். உன்னோட பிரச்னையாக மட்டுமே கருதி, உருகி உருகி மூச்சுத் திணறிக் கொண்டிருக்காதே! எத்தனையோ விஷயங்களை வசப்படுத்திய உனக்கு இதை வசப்படுத்தத் தெரியாதா? முதலில் தயக்கத்தைத் தள்ளிவிடு. மற்றதெல்லாம் தானாய் மலரும். நம்பிக்கை கொள் பாண்டி. நம்பிக்கைதானே நமக்கு வேறு என்ன இருக்கு?

கடிதம் முடிந்தது. அந்தக் குரல் இன்னும் ஒலித்துக் கொண்டேதான் இருக்கிறது. நாற்காலியை ஜன்னலுக்கு நேரே இழுத்துப் போட்டான். சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். மனசு அசை போட்டது. பார்வை ஜன்னலுக்கு வெளியே தாவிற்று. வெளியே ஒரு மரம். ஆடாமல் அசையாமல் அப்படியே நின்று கொண்டிருந்தது. சித்திரை மாதப் புழுக்கம். வெகு நேரத்திற்குப் பின் மெல்ல ஓர் இலை அசைந்தது. ஒன்று இரண்டானது. சிறிது நேரத்தில் மொத்த மரமும் அசைவு கொடுத்தது. ஜிலுஜிலுவென்று காற்று வந்து நெஞ்சில் மோத புழுக்கம் தணிந்தது. சந்தோஷம். விடுதலை வந்து விட்டாற்போல் ஒரு சந்தோஷம்!

## பத்திரிகைகளும் பாதிரியாரும்!

**வா**ட்டிகனிலிருந்து அமெரிக்காவுக்கு வந்த ஒரு மதகுருவை பத்திரிகையாளர் பேட்டி கண்டனர்:

"நைட் கிளப்புக்குப் போவீர்களா?" என்று ஒரு நிருபர் கிண்டலாகக் கேட்டார்.

அவருக்கு பதிலடி கொடுத்து, அதே சமயம் தம்மைப் புனிதராகவும் உறுதிப்படுத்த விரும்பிய பாதிரி, "நைட் கிளப்பா? அப்படி ஒன்று இங்கே இருக்கிறதா என்ன?" என்று திருப்பிக் கேட்டார்.

அன்று மாலை நாளிதழில் செய்தித் தலைப்பு : "நியூயார்க் வந்து சேர்ந்ததும் மதகுருவின் முதல் கேள்வி: இங்கு நைட்கிளப் இருக்கிறதா?"

இதைப் படித்து அதிர்ச்சி அடைந்த பாதிரியார், இன்னும் ஜாக்கிரதையாக இருக்கத் தீர்மானித்தார். அன்று மாலை ஜபக் கூட்டத்தில் அவையடக்கமாகச் சொன்னார் : "நான் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவன். பிரபலமான குட்டிக் கதைகள் நிறைய அறிந்தவன். என் பேச்சினிடையே சுவாரஸ்யம் கூட்ட அவற்றைச் சொல்வேன். ஆனால் பத்திரிகையாளர்கள் அவற்றைப் பொருட்படுத்த வேண்டாம். என் பேச்சின் சாரமான பகுதிகளை வெளியிட்டால் போதும்."

மறுநாள் காலை பத்திரிகைத் தலைப்பு இப்படி இருந்தது :

"பாதிரியார் நிறைய குட்டிக் கதைகள் கூறினார். ஆனால் அவை அச்சேற அருகதையற்றவை!"

- சீதாராம் யெச்சூரி கூறியது.

தகவல் : வடவள்ளி ராமசுப்பிரமணியன்

# ஜாலியா இருக்கியே என்ன ரகசியம்?

"என்ன லக்ஷ்மி போனவாரம்தான் பொண்ணு கல்யாணம் Grand ஆக பண்ணினே! டென்ஷன், டயர்ட்னஸ் எதுவும் இல்லாம, ஜாலியா இருக்கியே என்ன ரகசியம்?"

"இப்ப மட்டுமா கல்யாணத்து முன்னாலயே Free தான். வரன் நிச்சயமானவுடனே கல்யாண சத்திரமும் JD Cateringகும் ஏற்பாடு பண்ணிட்டு நிம்மதியாயிருந்துட்டேன். கல்யாண சத்திரத்துல உள்ள நுழைஞ்சதலேர்ந்து கட்டுசாத கூடை வரை எந்த கவலையுமில்லை. குடும்பத்துல எல்லோரும் வைதீக காரியங்களிலும் கலந்துண்டு பொண்ணு கல்யாணத்தையும் ஒவ்வொரு நேரத்துலும் முழு ஈடுபாடோட ரசிக்க முடிஞ்சது.

"அப்ப எந்த பொறுப்புமே நமக்கு இல்லேன்னு சொல்லு..."

"சரியாச் சொன்ன. எல்லாப் பொறுப்பையும் அவாளே ஒத்துண்டு JD Cateringல பண்ணின சர்வீஸ் இருக்கே அப்பப்பா! சத்திர Enteranceல சுமங்கலி மாமி ஒருத்தர ஏற்பாடு பண்ணியிருக்கா. எப்போதும் சிரிச்ச முகத்தோட எல்லோரையும் வரவேற்கிறா, அவசியம்னா ஆரத்தி, நலங்கு பாட்டு கூட பாடுவா. சாப்பாடு செக்ஷன்ல் தனி மேனேஜர். பிள்ளையாத்துக்காரா, பொண்ணாத்துக்காரா எல்லோரையும் தனித்தனியா ஒவ்வொரு வேளையும் நன்னா கவனிக்கறா. JD ஆஜர் ஆகி அங்கங்க இருக்கா. எந்த குறையும் உடனே சரி பண்ணிடறா. பிள்ளையாத்து காரர்களுக்கும் பரம திருப்தி. அப்புறம் என்ன வேணும்?"

"இப்பத்தான் புரியுது உன் Freshness ரகசியம். பொண்ணு கல்யாணன்னா ரொம்ப கஷ்டம்னு நினைச்சுண்டு இருந்தேன். என் கவலையெல்லாம் போயே போச்சு. லெஷ்மி

**"வரனைப்பார்த்து நிச்சயம் பண்ணுங்க JD Catering ஏற்பாடு பண்ணிட்டு நிம்மதியா இருங்க."** தி.நகர், சென்னை -17 "ராதா லால்ஜி ஹால்" கல்யாண மண்டபத்தில் 27.3.97 அன்று நடந்த என் பெண் கல்யாணத்தில் சர்வீஸ் தந்த திருப்தியில் இந்த விளம்பரம் கொடுத்திருக்கிறேன்.

திருமதி. **லக்ஷ்மி ரகுநாத்**

96/8, ஸவுத்வெஸ்ட் போக் ரோடு, தி. நகர், சென்னை - 17. போன் : 4344463

கல்யாணம் மற்றும் சுபகாரியங்களுக்கு ஆர்டரின் பேரில் ஸ்பெஸல்டிபன், காபி சாப்பாடு வகைகள், ஸ்விட் வகைகள், பருப்பு தேங்காய் ஜோடி, திரட்டிபால் கைமுறுக்கு, தட்டை, சீடை, சிப்ஸ் நெய்மைசூர்பாகு ஆகியவை சிறந்த முறையில் குறித்த நேரத்தில், தங்கள் இல்லத்திற்கே வந்து சர்விஸ் செய்து தருகிறோம். எங்களிடம் அனைத்து வசதிகளுடன் கூடிய கல்யாண மண்டபங்கள், தி.நகர், மைலாப்பூர், RA புரம் மற்றும் (உள்ளகரம்) மடிப்பாக்கம் ஆகிய இடங்களில் வாடகைக்கு கிடைக்கும்.

## JD மேரேஜ் கேட்டரிங் சர்விஸஸ்
## ஸ்ரீ சாய்கிருஷ்ணா ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

**Booking Office**
No.65, CPஇராமஸ்சாமி ரோடு, ஆழ்வார்பேட்.
அபிராமபுரம், 4வது தெரு, சென்னை - 18.
✆ : 4996807

**Head Office**
Plot No.13, EB காலனி, 3வது தெரு,
ஆதம்பாக்கம், சென்னை - 88.
✆ : 2450164, 2456035

மே 18, 26, 31, ஜுன் 1, 16, 19, 27, ஜுலை 2, 6, 9, 12,14, ஆகிய தேதிகளில் மவுன்ட் ரயில் நிலையத்திலிருந்து 2 கிமீ தொலைவில் அழகிய நவீன வசதிகளுடன் ஸ்ரீ குரு ராகவேந்திரா கல்யாண மண்டபம், சுவாமி நகர், உள்ளகரம், சென்னை - 91 உள்ளது. ✆ : 2345232.

JD Group Phones : 4996807, 2450164, 2456035, 2345232.

# ஸ்ரீ குறையொன்றுமில்லை

சத்யம் பகவானுக்கு மிக உகந்த புஷ்பம் என்று சொன்னேன்.

மனு ஸ்ம்ருதியில் ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கிறது.

**சத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத்**
**ந ப்ரூயாத் சத்யம் அப்ரியம்**
**ப்ரியம் ச அந்ருதம் ப்ரூயாத்**
**ஏஷ தர்ம சநாதன:**

'சத்யமே பேசு. சத்தியத்தையும் ப்ரியமாகப் பேசு! உண்மையைப் புண்படும்படி சொல்லாதே. அதே சமயத்தில் ப்ரியத்தினால் கூட பொய்யைச் சொல்லாதே; ஒரு மனிதரை ஸ்தோத்திரம் பண்ணாதே. இதுவே உன் தர்மமாய் இருக்கட்டும்...' என்கிறது. இந்தப் பொது விதிக்கு விதிவிலக்கும் கற்றுத் தருகிறது.

ந்ருதம் என்றால் பார்த்ததை அப்படியே பார்த்தபடி மாற்றாமல் சொல்வது. அந்ருதம் அதன் எதிர்மறை! அதாவது பார்த்ததை அப்படியே ஒப்பிக்காமல் மனத்துக்கு இதமான முறையில் எடுத்துச் சொல்வது. பிறர் நம்மைப் போற்ற வேண்டும் என்பதற்காக இப்படிச் செய்யக்கூடாது; ஆனால் பிறருடைய துன்பம் குறையுமேயானால் அதைச் செய்யலாம்- அதாவது சுயநல நோக்கமோ முகஸ்துதியோ இல்லாமல் சந்தர்ப்பத்துக்குத் தக்க வகையில் உண்மைக்கு வடிவம் தரலாம். அந்த வடிவமும் சத்யமே.

இந்த சத்யம் என்பது சம தர்மம்! பரமாத்மாவே சத்யமாகவும் இருக்கிறான்; ந்ருதமாகவும் இருக்கிறான்.

சத்யம்தான் அனைத்துக்கும் மூலம். பொய் இருக்கிறதே... அதுதான் எல்லா தீமைகளுக்கும் மூலம்.

இவ்வாறு சத்யம் உள்ளிட்ட எட்டு புஷ்பங்கள் யாருக்கு ப்ரீதி என்று கேட்டால் விஷ்ணுவுக்குப் ப்ரீதி.

விஷ்ணு: ப்ரீதி கரம்பவேத்.

எங்கும் வியாபித்திருக்கிறானே, அந்த எம்பெருமானுக்கு ரொம்ப ப்ரீதியான இந்த எட்டு புஷ்பங்களையும் சமர்ப்பிக்க வேண்டும்.

'விஷ்ணவே நம:' என்று சொல்லி அர்ச்சிக்கும்போது எட்டும் நம்மிடம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ள வேண்டும்.

இப்படிச் சொன்





னால் என்ன அர்த்தம்..?

'விஷ்ணவே நம:' என்று ஒருத்தர் புஷ்பத்தை எடுத்து அர்ச்சனை பண்ணிக் கொண்டேயிருந்தால் இந்த எட்டு விதமான புஷ்பங்களும்- குணங்களும்-



3 முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாசார்யார்

அவருக்கு வந்து சேர்ந்துவிடும்.

நாம் ஒரு புஷ்பத்தைக் கொடுக்கிறோம்- ஒரு நாமாவைச் சொல்கிறோம்... அவன் எட்டு மடங்காகத் திருப்பித் தருகிறான் நமக்கு! அவ்வளவு காருண்யம் நம்மிடத்திலே அவனுக்கு.

'என்ன திருப்பிக் கிடைக்கும் என்று யோசிக்காமல் அர்ச்சனை பண்ணக் கூடாதா?' என்று கேட்கலாம். ஆனால் நாம் கலியுகத்தில் வாழ்கிறோம் இல்லையா...? அதனாலே முதலிலேயே பலச்ருதியைச் (அதாவது ஒரு காரியத்தால் அடைகிற பயனை) சொல்ல வேண்டியிருக்கிறது. வழக்கமாக பலச்ருதி என்பது கடைசியிலேதான் வரும்!

பலன் என்னவென்று தெரிந்து கொண்டு ஒரு காரியம் செய்கிறோம். ஆனால் பலன் கிடைக்கவில்லை- ஏன்? நமக்கு நிஷ்டை போதவில்லை என்பதுதான் காரணம். மீண்டும் மீண்டும்- பலன் சித்திக்கிற வரை- நிஷ்டையுடன் முயற்சி செய்ய வேண்டும்.

'விஷ்ணு' என்கிற (சஹஸ்ரநாமத்தின்) இரண்டாவது திருநாமத்தினால் மட்டுமே இத்தனை பலன் நமக்குக் கிடைக்கிறது என்றால் இன்னும் மீதி 998ஐயும் உச்சரித்தால் என்னவெல்லாம் வாய்க்கும்!

'சஹஸ்ரநாமத்தைச் சொல்வதால் என்ன கிடைக்கும்?' என்று கேட்டால்... 'என்னதான் கிடைக்காது!' என்பதே பதிலாக இருக்கும்!

நித்யம் சஹஸ்ரநாமம் சொல்கிற ஒருவருக்கு ரகமாக உபசாரம். "இன்னும் இரண்டு நாள் தங்கக் கூடாதா? சாப்பிட்டுட்டுப் போகலாமே..."

இதையெல்லாம் பார்த்தார் வேறொருவர். 'நமக்கு ஏன் இந்த உபசாரம் நடக்கவில்லை?' என்று எண்ணம் வந்தது அவருக்கு.

தேடிக் கொண்டு போனால் கௌரவம் கிடைத்துவிடுமா என்ன..? நமது அனுஷ்டானத்தினால் அது தானாகவே நம்மிடம் வந்து சேரும்!

சஹஸ்ரநாமத்தின் ஒவ்வொரு நாமாவும் சின்னச் சின்னதாய் இருக்கிறது. பெரிய பெரிய விஷயங்களைக் காட்டுகிறது. அதி சூக்ஷ்ம நாமா; அதில் அடங்கியிருப்பது அதி ஸ்தூலம். ஒவ்வொரு நாமாவும் ஓர் அணு; அதை விவரித்தாலோ விபு! எங்கும் பரவியிருக்கிற பரமாத்மா அதில் இருக்கிறான்.

சஹஸ்ரநாமம் ஒரு கலைக் களஞ்சியம் கூட. எல்லாம் அதற்குள்ளே அடங்கியிருக்கிறது. வைத்ய சாஸ்திரம் முதற்கொண்டு அத்தனையும்! எல்லா சாஸ்திரத்திலேயும் சஹஸ்ரநாமத்துக்கு விநியோகம் உண்டு. அதனால் தான் அதை நித்யம் பாராயணம் பண்ண வேண்டும்.

பாராயணத்தால் பலன் என்ன என்று பலச்ருதியையும் சொன்னேன். கலியுகத்திலே பலனை முதலில் விவரிக்க வேண்டியிருக்கு என்றும் சொன்னேன்.

வியாஸ மஹரிஷி இருந்தாரே... அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'கலி சாது:' என்றார்.

கலி கொடியது; ரொம்ப துஷ்டை; இந்த யுகத்தில் எல்லாம் தலைகீழ் என்பதுதானே நமது அறிவு...? வியாஸ மஹரிஷி இப்படிச் சொல்கிறாரே? என்று யோசனை வரும்.

சுத்தமான மந்த்ரோச்சாரணத்தை மனம் லயித்துக் கேட்டால், ஒரு அச்வமேத யாகம் பண்ணினால் பெறக் கூடிய பலனை இந்தக் கலியுகத்திலே பெற்று விடலாம். ரொம்ப



ஆழ்வார்கள் விஷ்ணு பரமாகப் பாடி வைத்திருக்கிறார்கள். நால்வர் சிவபரமாகப் பாடினார்கள். வேதத்தில் ஸகல தெய்வங்களையும் ஒரே மாதிரி ஸ்தோத்திரம் செய்திருக்கிறது. உபநிஷத்து என்று போனால், அங்கே தெய்வங்களைப் பற்றி அதிகம் பேச்சில்லாமல், எல்லாம் ஆத்ம தத்துவமாகச் சொல்லியிருக்கிறது. இங்கே திருவள்ளுவரை எடுத்துக் கொண்டால் அவர் தெய்வம், தத்வம் இவைகளைப் பற்றி, வைதிக சம்பிரதாயப்படியே சொல்லியிருந்தாலும், அதைவிட ரொம்ப அதிகமாக தர்மங்கள் நன்னெறிகள், (morals, ethics) இவற்றையே சொல்கிறார். இன்னொரு பக்கம் திருமூலரைப் பார்த்தால் அங்கே ஸ்வாமி பக்தி என்பதைவிடப் பிராணாயாமம், தியானம், தாரணை, ஸமாதி, இத்யாதி யோக சமாசாரங்கள்தான் நிறைய வருகின்றன. 'இப்படி ஒவ்வொன்றும் ஒவ்வொன்றைச் சொன்னால் எதை எடுத்துக் கொள்வது?' என்றால் எதை எடுத்துக் கொண்டாலும் தப்பில்லை. நாம் எடுத்துக் கொண்டதை நடுவிலே விடாமல், அதையே நம்பிக்கையோடு பிடித்துக் கொண்டு, போய்க் கொண்டிருந்தால் முடிவில் எது பரமார்த்த சத்தியமோ அதையே அடைந்து

## அருள்வாக்கு

விடுவோம். ஆரம்பத்தில் இவை வேறு வேறு வழிகளாகத் தோன்றினாலும், முடிவில் எல்லாம் கொண்டு சேர்க்கிற இடம் ஒன்றுதான்.

*தேவர் குறளும் திருநான்மறை முடிவும்*
*மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை*
*திருவாசகமும் திருமூலர் சொல்லும்*
*ஒரு வாசகம் என்(று) உணர்.*

இதே மாதிரி 'சிவமஹிம்ன ஸ்தோத்திர'த்திலும் சொல்லியிருக்கிறது. புஷ்ப தந்தர் என்ற மகான் - கந்தர்வராக இருந்து ஈசுவர சாபத்தால் பூமியில் விழுந்தவர் என்று சொல்வார்கள் - பரமேசுவரன் மகிமைகளைப் பற்றிச் சொல்கிற ஸ்தோத்திரம் அது. அதிலே ஒரு சுலோகத்தில், 'த்ரயீ (வேதம்), ஸாங்கியம் (தத்வ ஆராய்ச்சி), யோகம், பசுபதி, மதம், வைஷ்ணவம் என்பதெல்லாம் அவரவரின் ருசி விசித்திரத்தைப் பொறுத்து, ஒரே பரமாத்மா தத்வத்தில் கொண்டு சேர்க்க ஏற்பட்டவைதான் - எந்த நதியானாலும் ஒரே சமுத்திரத்தில் போய் விழுகிறமாதிரி' என்று சொல்லியிருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

கஷ்டப்பட்டு சம்பாதிப்பதை மிகச் சுலபமாகப் பெற முடிவதால் 'கரி சாது:' என்றார்.

இவ்வளவு சுலபத்திலும் ஒரு நிபந்தனை அழகாக ஒளிந்திருக்கிறது பாருங்கள்... என்ன நிபந்தனை அது? **மனம் லயித்து** என்பதுதான் அந்த நிபந்தனை.

ரொம்ப சுலபமாகச் சொல்லிவிடலாம் 'மனம் லயிக்க வேண்டும்' என்று... ஆனால் முடிகிறதா? அதற்கும் நமது சாஸ்திரமே வழி சொல்லித் தருகிறது. அந்த வழிதான் பிராணாயாமம்.

பிராணாயாமம் என்பது மூச்சை இழுத்து வெளிவிடும் பயிற்சி என்று எளிமையாய்ச் சொல்லலாம்.

ஆனால் இழுத்த மூச்சை உள்ளே தேக்கி வைக்கிற நேரம் இருக்கிறதே, அது முக்கியம். அந்த நேரம் அதிகமாகிக் கொண்டே வர வேண்டும். மனம் கட்டுப்படும்.

மல்லிக் கொடிபோல் ஆடிக் கொண்டிருக்கிற நமது மனம், பிராணாயாம தேக்கத்தினாலே ஆடாமல் நிற்கும். அப்படி மனத்தை நிறுத்தி விட்டால், 'கோல் தேடி ஓடும் கொழுந்து போல் மால் தேடி ஓடும் மனம்' என்கிறார் பூதத்தாழ்வார்.

ஆக, மல்லிக்கொடி மாதிரி ஆடுகிற மனத்தைப் பிராணாயாமத்திலே நிறுத்தி, எம்பெருமான் என்கிற அந்தக் கொம்பில், அவன் திருவடியில் கொண்டு சுற்றி விட்டுவிட்டால் அது பற்றிக் கொண்டு படரும்.

'எத்தனை நேரம் உட்கார்ந்து சுலோகத்தைச் சொன்னாலும் மனம் லயிக்க மாட்டேன் என்கிறதே; இரண்டு சுலோகம் சொல்வதற்குள் எங்கேயோ போய் விடுகிறதே...' இப்படி எத்தனையோ குறைகள் நமக்கு உண்டு.

இதெல்லாம் நிவர்த்தியாக வேண்டுமானால் பிராணாயாம பலம் நமக்கு இருக்க வேண்டும். அந்த பலம் பெருகப் பெருக மந்த்ரத்தை உச்சரிப்பதற்கான பலமும் அதிகமாகும். மூச்சைத் தேக்குவது என்பது மந்திர உச்சாரணத்தில் ரொம்ப முக்கியம்.

நாம் மிகவும் அவசரமான ஒரு யுகத்திலே் ஓடிக் கொண்டிருக்கிறோம். 'இதைப் பண்ணுவோமா? அதைச் செய்வோமா?' என்று மனம் அலைந்து கொண்டேயிருக்கிறது. சந்தியா வந்தனம் என்பதாக ஒன்று செய்தாலும் அது ஐந்து நிமிடத்தில் முடிந்து போய் விடுகிறது!

உண்மையில் ஐந்து நிமிடங்களில் முடியக் கூடிய விஷயமா அது..? பிராணாயாமம் என்பது அந்தர்கதமாயிற்றே! அதெப்படி ஐந்து நிமிடங்களில் முடியும்?

நமது ஓட்டம்தான் அதை அப்படிக் குறுக்கி விட்டது. அதனால்தான் நமக்குப் பிராணாயாம பலம் இல்லாமல் இருக்கிறது.

பிராணாயாமத்தை ரொம்ப வலியுறுத்தியிருக்கிறது சாஸ்திரம். ஸ்த்ரீகளும் பிராணாயாமம் செய்யலாம் என்கிறது. மந்திரம் கூறிச் செய்யாவிட்டாலும் நித்யமே பெண்கள் அதைப் பயிற்சியாகச் செய்யலாம். அதற்குப் புராணத்திலே முன்னுதாரணம் இருக்கிறது.

'யார்- எந்தப் பெண்- பிராணாயாமம் செய்தார் அந்தக் காலத்தில்?' என்று கேட்டால், கௌசல்யா தேவி- சாக்ஷாத் ராம மாதாவே பிராணாயாமம் செய்திருக்கிறார். அந்த எம்பெருமானை நித்யம் தியானித்தாள்.

அவள் பெற்ற பலன் எப்பேர்ப்பட்டது என்பதுதான் நமக்குத் தெரியுமே!

(தொடரும்)

**கோ**டம்பாக்கம் வட்டாரத்தில் சமீபத்தில் பேசப்படுகிற பரபரப்பான விஷயம், பிரபுதேவா நடிக்கிற வி.ஐ.பி. படத்துக்கு ரூ. 25 லட்சம் செலவில் போடப்பட்டிருக்கிற பிரும்மாண்டமான செட். செட்டுக்குள் யாரையும் நுழைய விடுவதில்லை, தயாரிப்பாளர் தாணு. ரகசியம்! அப்படி என்ன இருக்கிறது அங்கே என்கிற கேள்வி குறுகுறுக்க, செட்டைப் போட்ட ஆர்ட் டைரக்டர் பிரபாகரனைச் சந்தித்தோம்.

"இதுவரை தமிழ் சினிமாவில் யாரும் செய்யாதபடி புதுமையாக ஒரு பங்களா செட் போட வேண்டும் என்று முடிவு செய்தோம். சாதாரணமாக பங்களா என்றால், எம்.ஜி.ஆர். காலத்திலிருந்து இன்று வரை – பெரிய ஹாலின் நடுவிலிருந்து இரண்டு மாடிப் படிகள் பிரியும். இரண்டு பக்கமும் பால்கனி இருக்கும். இது பார்த்துப் பார்த்துப் பழகியது. ஆகவே மாறுதலாக ஏதாவது செய்யலாமே என்று முடிவு செய்து, இத்தாலிய பாணி பங்களா ஒன்று நிர்மாணிக்க முடிவு செய்தோம். இந்த பங்களாவின் நடுவில் மாடிப்படியெல்லாம் கிடையாது. ரொம்ப குட்டையான மேல்தளம்தான். அதைக்கூட பிளெயினாக விடாமல் 'Box effect' தந்துள்ளேன். அதாவது கொஞ்சம் மேடு, கொஞ்சம் பள்ளம் என்று ஒரு குகைக்கு நவீனத் தோற்றம் கொடுத்தாற்போல ஸீலிங்.



"மேலும் சாதாரணமாக சிமெண்ட் தரையில் தேவையான டிசைன் வரைந்து கொள்வதுதான் நடைமுறை. இதில் அதிலும் மாறுபட்டிருக்கிறேன். தரை, சுவரெல்லாம் கிரானைட் பதித்தாற்போல ஓர் எஃபெக்ட் தந்துள்ளேன். நிஜ கிரானைட் அல்ல. எப்படிச் செய்தேன் என்பது தொழில் ரகசியம். இதற்கு மட்டுமே ஐந்து லட்சம் செலவாகி விட்டது. இருபது நாட்கள், 120 கார்பெண்டர்களை வைத்து இந்த செட் போட்டேன். படத்தில் இது பிரபுதேவாவின் வீடு" என்னும் பிரபாகரன், தமது வித்தியாசமான ஆர்ட் டைரக்ஷனுக்காக (புள்ளகுட்டிக்காரன் படம்) மாநில விருது வாங்கியவர். இருமுறை தேசிய விருது பெற்ற பிரபல ஆர்ட் டைரக்டர் சாபு சிரிலைத் தம் மானசீக குரு என்று சொல்லும் இவர், தம்மை ஒரு முழு நேர கலை இயக்குநராக்கியவர் ராஜீவ்மேனன்தான் என்கிறார்.

"ராஜீவின் மிகச் சிறந்த பல விளம்பரப் படங்களில் என்னைத்தான் அவர் ஆர்ட் டைரக்ஷன் பார்க்கச் சொல்லியிருக்கிறார். ஒரு நிமிடம் ஓடும் விளம்பரப் படத்துக்குப் பணியாற்றுவதும் ஒரு முழு திரைப்படத்துக்குப் பணியாற்றுவதும் ஒரே அனுபவம்தான். சொல்லப் போனால் சினிமாவைக் காட்டிலும் இது

• பிரபாகரன்





# இத்தாலிய பாணியில் ஒரு பங்களா!

கஷ்டம். காரணம், விளம்பரங்களில், சினிமாவைக் காட்டிலும் - சின்ன விஷயங்கள் தெளிவாகத் தெரியும். ஸோ, மிக கவனம் செலுத்த வேண்டும்" என்கிறார்.

பரதன் மூலம் சினிமாவுக்கு வந்த பிரபாகரனுக்குப் புகழ் வாங்கித் தந்த படங்கள் - புள்ளகுட்டிக்காரன், உள்ளத்தை அள்ளித் தா, சுந்தர புருஷன், பாஞ்சாலங்குறிச்சி.

பிரபாகரனுடன் பேசிக் கொண்டிருந்த போது கிடைத்த சில தகவல்கள் வெகு சுவாரஸ்யம்.

"நம் சினிமாக்களில் காட்டப்படும் கோர்ட் செட்கள் எத்தனை புராதனமானவையாக இருக்கின்றன! சமீபத்தில் டில்லி போயிருந்தேன். அங்கே கோர்ட் வளாகத்தைப் பார்த்தபோது பிரமித்தே விட்டேன். அத்தனை நவீனம்! ஆனால் நாமோ இன்னும் சிவப்புக் கலர் கட்டடத்தையும் ஒரே மாதிரி மர மேசை - நாற்காலிகளையும்தான் கோர்ட்டாகக் காட்டுகிறோம். அதைத்தான் மக்களும் ஏற்கிறார்கள். கால மாற்றத்துக்கேற்ப இந்த அடிப்படை விஷயங்களையெல்லாம் மாற்றினாலென்ன என்று கேட்டால், 'மக்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்' என்று பயப்படுகிறார்கள்!"

நிஜ வாழ்வில் இருக்கிற சிலவற்றைத் தவிர்த்து, இல்லாத சிலவற்றைச் சேர்த்தால்தான் ஒரு சினிமா செட் பூரணமடைகிறது என்பது இவரது சித்தாந்தம்.

- கிரிஜா ஜின்னா

# தேரோட்டம் - 16

**வி.கே. ராமசாமி**

# சில இருண்ட

**வா**ழ்க்கையில், பிறரால் ஏமாற்றப்படுவதற்கென்றேதான் நான் பிறந்திருக்கிறேனோ என்று முன்பெல்லாம் அடிக்கடி தோன்றும். குறிப்பாக, ஏ.பி. நாகராஜன் என்னை விட்டுப் போனபின், நண்பர்களும் உறவினர்களும் அண்டி இருந்தவர்களும் எனக்களித்த ஏமாற்றம் கொஞ்சநஞ்சமல்ல.

தவிர, அந்நாளில் என்னைத் தட்டிக் கேட்க ஆளில்லாததால் சில கெட்ட பழக்கங்களுக்கு வேறு தீவிரமாக அடிமையாகியிருந்தேன். குடிபோதையில் இருந்தபோது, எத்தனை பேர் கையெழுத்துப் போட்டு, வாங்கிப் போனார்களோ, கணக்கே இல்லை!

வாழ்க்கையில் நான் குடியால் இழந்தது அநேகம். பொருள் இழப்பு, உடல்நல இழப்பு மட்டுமல்ல... வாழ்க்கையையே இழந்து விடுகிற சூழ்நிலை ஒருதரம் உருவானது!

**ஓ**.என். கிட்டு என்கிற நாடக உலக நண்பர் ஒருவர். தமக்காக என்னைச் சில ஸ்பெஷல் நாடகங்கள் போட்டுத் தரச் சொல்லிக் கேட்டிருந்தார்.




எனது சினிமா பிரபலம் மூலம் நண்பருக்கு உதவ முடிகிறதே என்கிற எண்ணத்தில், நான் அவருக்கு இரண்டு நாடகங்கள் நடத்தித்தரச் சம்மதித்து, அவரது இருப்பிடமான விழுப்புரத்துக்கு என் நண்பர்களான டி.கே. ராமச்சந்திரன், சாய்ராம், வி.கே. கார்த்திகேயன் இவர்களுடன் சென்றேன்.

பம்பாய் மெயில், பதிபக்தி என்ற அந்த இரண்டு நாடகங்களில் ஹீரோயின்களாக நடிக்க இரண்டு பெண்கள் (தொழில்முறை நாடக நடிகையர்) அழைத்து வரப்பட்டனர்.

நாடகம் நடந்து முடிந்த ஒருநாள் இரவு, நான் போதையில் இருந்த சமயம், அவர்கள் இருவரும் என்னிடம் வந்து தேனொழுகப் பேசிக் கொண்டிருந்தார்கள். வயது, வேகம், நிலை தடுமாறியிருந்த சந்தர்ப்பம்... என்னை விதி அவர்களிடம் வீழ்த்தியது.

அன்று தொடங்கிய அந்த உறவு ஆண்டாண்டுகளுக்கும் நீடிக்கும் என்று நான் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. பலிகடா என்பார்களே, கிட்டத்தட்ட அப்படித்தான்.

திரையுலகில் என் செல்வாக்கு, புகழ், பணம் இவற்றை உத்தேசித்துத்தான் அவர்கள் என்னுடன் ஒட்டிக் கொண்டார்கள் என்பது தெரிந்தும் நான் மீளமுடியாதவனாக இருந்தேன்.

பி.எஸ். ஞானம் என்றொரு நடிகர். அந்நாளில் மிகப் புகழ்பெற்ற நாடகக் கலைஞர் அவர். மிக்க வாஞ்சையும் நல்லெண்ணத்துடனும் அவர் என்னை எச்சரித்தார்.

"ராமசாமி, இந்தப் பெண்கள் சரியில்லை. நீ தொடர்பைத் துண்டித்துக் கொள்வதுதான் புத்திசாலித்தனம்'' என்று எத்தனையோ விதமாக அறிவுறுத்தினார்.

எனக்கு இதெல்லாம் புரியாமலோ, தெரியாமலோ இல்லை. ஆனால் மீள முடியாமல் இருந்தேன் என்பதுதான் வெட்கத்துக்குரிய வேதனை.

கிட்டத்தட்ட பத்தொன்பது வருடங்கள். என் சம்பாத்தியம், சொத்து யாவும் கொஞ்சம் கொஞ்சமாகவும் அவ்வப்போது மொத்த மொத்தமாகவும் கரைய, அந்தப் பெண்கள் காரணமாயினர்.

எல்லாவற்றையும் விட உச்சக்கட்டம். வாழ்வில் நான் நீதிமன்றத்தின் படியேறவும் அவர்களே காரணமானதுதான்.

ஒரு வேகத்தில் அப்போது என் அபிபுல்லா ரோடு வீட்டை அவர்கள் பெயரில் எழுதி வைத்திருந்தேன். எழுதுகிறபோதே என் வக்கீல் என்னை மிகவும் எச்சரித்திருந்தார். "இதெல்லாம் ரொம்ப அதிகம். பின்னால் வருத்தப் படுவாய்" என்று.

ஆனால் நான் அப்போது அவருக்குச் சொன்ன பதில் என்ன தெரியுமா?

"வீட்டை நான் இவர்களுக்கு எழுதா விட்டால் என் சொந்தபந்தங்கள் எடுத்துக் கொண்டு விடுவார்கள். எப்படியும் எனக்கு என்னவோ அது மிச்சமாகப் போகிறதில்லை. நீங்கள் எழுதி விடுங்கள்!"

அப்போதும் எனக்கு அந்தப் பெண்களின் மேல் கொஞ்சம் இரக்கம் இருந்ததுதான் ஆச்சர்யம்.

ஒருநாள்... அந்த தினத்தை மறக்கவே முடியாது. மார்ச் 2, 1969, ஞாயிற்றுக்கிழமை.

# வருடங்கள்!

காலை எழுந்து, உடற்பயிற்சி, யோகாவெல்லாம் செய்துவிட்டு, ஷூட்டிங் போனேன். எம்.ஜி.ஆரின் குமரிக்கோட்டம் படம்.




நான் கிளம்பிப் போனதும் சற்று நேரம் கழித்து என் நெருங்கிய நண்பரும் என் பட நிறுவனத்தின் ஆஸ்தான பாடலாசிரியருமான கவிஞர் மருதகாசி என்னைப் பார்க்க என் வீட்டுக்குப் போயிருக்கிறார்.

வாசல் கேட் திறந்து கிடக்க, புல்வெளியில் மாடு மேய்ந்து கொண்டிருந்ததாம். பலமுறை கூப்பிட்டுப் பார்த்து, யாரும் வராததால் வீட்டுக்குள்ளே போய்ப் பார்த்திருக்கிறார்.

யாரும் இல்லை! **எதுவும் இல்லை!**

உடனே அவர் எனக்கு போன் செய்தார்.

"நான் மருதகாசி பேசறேன்."

"சௌக்கியமா இருக்கீங்களா கவிஞரே?" என்றேன், என் சௌக்கியம் சந்திக்கு வந்து விட்டது தெரியாமல்.

"சௌக்கியமெல்லாம் இருக்கட்டும். உங்க வீட்டுக்கு வந்தேன். திறந்து கிடக்குது. யாருமே இல்லை. பக்கத்து வீட்டுல விசாரிச்சேன். பெரிசு பெரிசா மூணு டாக்ஸியிலே சாமான்களையெல்லாம் ஏத்திக்கிட்டு 'அவங்க' போயிட்டதா சொன்னாங்க. நீங்க ஏதோ ஊருக்குப் போறதா நினைச்சேன்" என்றார்.



எனக்கு பகீரென்றது. போனில் அதிகம் பேச முடியாததால், "நீங்க வீட்டைப் பூட்டிக் கிட்டு, இங்க சத்யா ஸ்டுடியோவுக்கு வந்துடுங்க" என்று மருதகாசியிடம் கேட்டுக் கொண்டேன்.

எனக்கு அப்போது முதலில் தோன்றிய விஷயம் இதுதான் : 'வீட்டுப் பத்திரத்தை விட்டுப் போயிருப்பார்களா?'

வக்கீலிடம் ஓடினேன். "போய்ப் பாருங்கள். ஏதாவது மிச்சம் இருக்கிறதா என்று" என்று அவர் துரிதப்படுத்தவும், வீட்டுக்கு ஓடினேன்.

என் அதிர்ஷ்டம் என்றுதான் அதைச் சொல்ல வேண்டும்.

நான் எழுதிக் கொடுத்த பத்திரத்தை அவசரத்தில் தவறவிட்டு, வீட்டின் ஒரிஜினல் பத்திரத்தை எடுத்துப் போயிருந்தார்கள், அந்தப் பெண்கள்!

வக்கீலிடம் விவரம் சொன்னேன். "ரொம்ப நல்லதாகப் போய்விட்டது. அந்தப் பத்திரத்தில், எதற்கும் இருக்கட்டும் என்று, பதிவு செய்யும்போதே நான் ஒரு வரி சேர்த்திருந்தேன். 'எந்த நேரத்திலும் நீங்கள் உங்கள் இஷ்டப்படி இந்தப் பத்திரச் செய்தியை மாற்றி எழுதிக் கொள்ளலாம்' என்று. கொண்டு




வாருங்கள்!" என்றார்.

போனேன். உடனடியாகப் பதிவாளர் அலுவலகத்தில் பேசி அந்தப் பத்திரத்தை கேன்ஸல் செய்தோம். வீடு பிழைத்தது!

அதோடு அந்தப் பெண்கள் என்னை விடவில்லை. சுருட்டிக் கொண்டு போனது போதாது என்று, கோர்ட்டில் வேறு என் மேல் கேஸ் போட்டார்கள், ஜீவனாம்சம் கோரி!

திருமணம் என்று முறையாக ஏதும் நடைபெற்றிருக்காவிடினும் நான் அவர்களுக்கு ஜீவனாம்சம் தரவேண்டித் தீர்ப்பானது.

காரணம் – குடிபோதையில் நான் இருந்த ஒரு சமயம் – அவளது மகளின் பள்ளி ப்ராக்ரஸ் கார்டில் அவள் என்னிடம் கையெழுத்து வாங்கியிருந்ததுதான். அதுவே கோர்ட்டாருக்குப் பெரிய ஆதாரம் – சாட்சியாக அமைந்து விட்டது!

முன்பே சொன்னது போல, வாழ்நாள் பூராவும் கையெழுத்துப் போட்டே ஏமாந்தவன் நான். அவற்றுள் இதுவும் ஒன்று!

ஒருவழியாக 1969-ம் ஆண்டு மார்ச் 2-ம் தேதியுடன் எனக்கு அந்தத் தொடர்பு முற்றிலுமாக விலகியது! புதுமனிதன் ஆனேன் என்று சொல்வதை விட மத யானை போல வெறிகொண்டவன் ஆனேன் எனலாம்.

என் கவனம் முழுவதையும் நடிப்பில் செலுத்தினேன். எத்தனை படங்கள்! எத்தனை வித வேடங்கள்! இரவு, பகல் பாராமல், பசி – தூக்கம் இல்லாமல், வெறிகொண்டவன் போல நடிப்பில் மூழ்கிப் போனேன்.

ஏழு மாதங்கள், நடிப்பைத் தவிர வேறு எதிலுமே கவனம் செலுத்தாமல் இருந்தவன் வாழ்வில் திடீரென்று இன்னொரு பெண்ணின் வரவு. ஆனால் இது இனிய வரவு.

எம்.ஆர். ராதாவின் நாடகக் குழுவில் ஹீரோயினாக நடித்துக் கொண்டிருந்த அந்தப் பெண், என் கம்பெனியில் நடிக்க வாய்ப்புக் கேட்டு முன்பே ஓரிரு முறை வந்திருந்தார். முன்னதாக, கைராசி, கடவுளின் குழந்தை போன்ற சில திரைப்படங்களில் நடித்திருந்த அனுபவமும் அவருக்கு இருந்தது.

'கண்மலர்' என்ற படத்தில் நான் அவருடன் இணைந்து நடிக்க நேர்ந்ததுதான்




எங்கள் முதல் சந்திப்பு.

இருவருக்கும் வாழ்க்கையில் நேர்ந்திருந்த சில கசப்புகளாலா, ஒருமித்த எண்ணங்களாலா, தெய்வ சங்கல்பத்தினாலா – தெரியவில்லை...

1969-ம் ஆண்டு, அக்டோபர் பத்தாம் தேதி நான் ரமணியைக் கைப்பிடித்தேன். வீட்டிலேயே எளிமையாக நடந்த திருமணம். மிக நெருங்கிய நண்பர்கள் மட்டும் வந்திருந்து வாழ்த்த, திருமணம் நல்லபடி நடந்தேறியது. வாழ்க்கையில் நிம்மதியாகக் கொஞ்சம் மூச்சுவிட ஆரம்பித்தது அப்போதுதான்!

(தொடரும்)

# ‘பெருச்சாளி நோய்’ வந்தால் இப்படித்தான் ஊதிப்போகும்!



‘பத்தொன்பது வயது இளைஞன் விஜய். மஞ்சள் காமாலை என்று கருதி ஏற்கெனவே பலவித சிகிச்சைகளை அளித்திருந்தார்கள். ஆயுர்வேதம், சித்தா எதையும் விட்டு வைக்கவில்லை. ஆனால் அவனது காய்ச்சல் இறங்கக் காணோம். வாந்தி எடுப்பதும் நிற்கக் காணோம். கணையம் பாதிக்கப்பட்டிருந்தது உண்மைதான். என்றாலும், சில நாட்கள் கண்காணித்ததில் இது மஞ்சள் காமாலை அல்ல என்பது புரிந்து போயிற்று.

மஞ்சள் காமாலையிலும் ஜுரம் வரும். ஆனால் 99, 100 டிகிரி என்கிற அளவில் அது சற்று மிதமானதாக இருக்கும். விஜய்யின் உடலிலோ தொடர்ந்து 104 டிகிரி என்கிற அளவில் காய்ச்சல் இருந்தது! தாங்கமுடியாத உடல்வலி என்றும் கூறினான்.

எல்லாவற்றையும் விட கவலைக்கிடமாக அவன் உடல் ஏறிக் கொண்டே வந்தது. ஒரே மாதத்தில் பதினாறு கிலோ எடை அதிகரித்திருந்தான்! உடலின் பல பகுதிகளில் வீக்கம். இவ்வளவு கோளாறுகளோடு அவன் என்னிடம் சிகிச்சைக்கு வந்த போதும் கூட "கையைத் தூக்கினால் வலிக்கிறது டாக்டர். நான் எப்படி கிரிக்கெட் ஆடுவேன்?" என்றுதான் கவலைப்பட்டான். கிரிக்கெட்டில் அவ்வளவு ஈடுபாடு அவனுக்கு! கல்லூரி மற்றும் சிறு சிறு கிரிக்கெட் அணிகளில் அவனுக்கு முக்கியமான ஓரிடம்.

பரிசோதனை செய்வதற்காக அவனை நீண்ட மேஜையில் படுத்துக் கொள்ளச் சொன்ன போது. அதிர்ச்சி. எவ்வளவு ஜுரம் அடித்தாலும் மற்றவர்களை கைத்தாங்கலாகப்

## மருத்துவ(ர்) மகிமை :

## டாக்டர் B. சேஷாத்ரி

# பெருச்சாளி நோயை விரட்டினோம்!

பிடித்தபடி ஒருவரால் அந்த மேஜையில் ஏறிப் படுத்துக் கொள்ள முடியும். ஆனால் விஜய்யால் தன் உடலைக் கூடத் திருப்ப முடியவில்லை. ஒரு தம்ளரைக்கூட அவனால் பிடித்துக் கொள்ள முடியாத நிலை.

அப்போதுதான் அவனை "லெப்டோபைரோஸிஸ்" நோய் தாக்கியிருக்குமோ என்று தோன்றியது. சாக்கடை நீரில் பெருச்சாளியின் சிறுநீர் கலந்து, அந்தச் சாக்கடை நீர் குடிநீரோடு கலக்கிறபோது அந்தக் குடிநீரைக் குடிக்கிறவருக்கு இந்த நோய் வரக்கூடும். மாதவரத்திலுள்ள, தமிழ்நாடு விவசாய யூனிட்டில் உள்ள பரிசோதனைச் சாலைக்கு விஜய்யின் ரத்தத்தை அனுப்பினோம்,

இதற்குள் அவனது மார்புப் பகுதியையும் சிறுநீரகங்களையும் 'ஸ்கான்' செய்தோம். எல்லாமே நார்மல்


• டாக்டர் சேஷாத்ரி

என்று தெரிய வந்தது. என்றாலும் அவனது உடலின் எடை மேலும் அதிகரித்தது. சுருக்கமாகச் சொன்னால், தனக்குள்ளேயே நீரில் மூழ்குவதைப் போன்ற ஒரு நிலை அவனுக்கு!

உடலில் நீர் இரண்டு விதங்களில் சேரலாம். ஒன்று ரத்தத்தின் மூலம் (இதில் 90% நீர் தங்கலாம்). இரண்டாவது சதைகளில் தங்கும் நீர் (இதில் நீரின் பங்கு 50% ஆக இருக்கும்). இந்த இரண்டாவது வகை நீர்தான் விஜய்யின் உடலில் அதிகரித்துக் கொண்டே வந்தது.

**மா**தவரத்திலிருந்து ரிப்போர்ட் வந்து சேர்ந்தது. விஜய்யைத் தாக்கியிருப்பது மேற்கூறிய 'பெருச்சாளி நோய்'தான் என்பது உறுதியானது.

மிக ஸ்ட்ராங்கான (பெனிசிலினை விட பல மடங்கு வீரியம் உள்ள) ஆன்டிபயாடிக் மருந்துகளை அவனுக்குக் கொடுத்தேன். ஒருநாள்... இரண்டு நாள்... மூன்றாவது நாளும் மருந்துகளால் பலனில்லை

என்றாலும், கவலை எழுந்தது. வேறு ஏதாவது சிக்கலோ? அவன் உடலில் கண்டு பிடிக்கப்படாத மர்மங்கள் இன்னும் இருக்கிறதோ?

நல்லவேளையாக நான்காம் நாள் மருந்து வேலை செய்ய ஆரம்பித்தது. விஜய்யின் எடை குறையத் தொடங்கியது. தினமும் ஒன்று, இரண்டு கிலோ என்று குறைந்து இரண்டே வாரத்தில் ஒல்லியான இளைஞனாகக் காட்சி தந்தான்! அதுதான் அவனது வழக்கமான தோற்றம் என்பதை நம்பக் கூட கொஞ்சம் கஷ்டமாகத்தான் இருந்தது!

சந்திப்பு : அருண்சரண்யா

"கால் இல்லாத பந்தலைக் காணக் காண விநோதம் – என்று ஆகாயம் ஏறிவிட்டாள் மந்தா! அம்மாவைப் பெற்ற அவள் மட்டுமா? அப்பனைப் பெற்றவனும் போய் விட்டான். இனி பானுவை விட்டு எல்லாமே போய் விடுமோ...?"

சில விநாடி நின்று பார்த்துவிட்டு உள்நுழைகிறான் இஸ்மாயில். உறவுமுறைப் படி பார்த்தால் பானுவுக்கு அத்தை மகன். இவன் எதற்கு வந்திருக்கிறான்?

கிழவியால் துல்லியமாகப் பார்க்க முடிய வில்லை. ஆனால் சுசீலாவால் சும்மா இருக்க முடியவில்லை. அவனைப் பார்த்த நொடிப் பொழுதில், அவளுக்குள் பானுவின் இருளுக்கு ஒரு மெழுகுவர்த்தி அகப்பட்டு விட்டது போல் ஓர் எண்ணம். அத்தனையையும் குழைத்தடித்து "வாப்பா... வா!" என்கிறாள்.

இஸ்மாயில் உள்நுழைந்த ஸ்திதியில் பானுவை கவனிக்கிறான்.

துக்கச் செய்தி சொல்லவிருக்கிறான் – அவன் பார்வையிலிருந்து சுசீலாவால் புரிந்து கொள்ள முடிந்தது. பானுவுக்கோ அவனைப் பார்க்கவே உறுத்தியது. ஒவ்வொரு முறை அந்த வீட்டுத் தொடர்பு உருவாகும் போதும் தனக்கும் தான் சார்ந்த சமூகத்துக்கும் இடையே ஒரு கடக்க முடியாத தொலைவு இடைவெளி உருவாவது போல பிரமை தட்டிப் போகிறது.

அதன் பிறகு கேட்பவர்களுக்கும் பதில் சொல்ல இயலாதபடி புழுங்க வேண்டி

## 16



இருக்கிறது. இருக்கும் துன்பம் போதாதா? இவன் வேறா...?

"என்னப்பா என்ன விஷயம்?"

"தாத்தா திடீர்னு ஹார்ட் அட்டாக்ல போய்ட்டார். போறதுக்கு ஒரு அஞ்சு நிமிஷம் முந்தி பானு பத்திதான் நிறைய பேசினார். பானு ஒரு தபா வந்து அவருக்கு அஞ்சலி செஞ்சா நல்லா ருக்கும். தகவல் சொல்ல வந்தேன்..."

இந்திரா சௌந்தர்ராஜன்

பேசினவன் இனி ஒரு வினாடி நிற்பதும் ஆகாது என்கிற மாதிரி திரும்பி நடக்கிறான்.

"அடியே பானு.. யாருடி - யார் வந்துட்டுப் போறாங்க. யாரோட தாத்தாடி போய்ட்டது..?" - மந்தா பதறிப் பம்முகிறாள்.

"அது வந்து... அது வந்து பாட்டி, நம்ம சொராம் தாத்தா இல்ல அவர்... அவர்தான்..." - பானுவின் மின்னல் வேகச் சுதாரிப்பு வாசலைத் தாண்டும் இஸ்மாயில் காதையும் நிறைக்கிறது.

சுரீர் என்று முள் தைத்த மாதிரி நிற்கிறான். 'இறப்பில் கூடவா மதம்? வேற்றுமை உணர்ச்சிகள்?' என்று கேட்கத்தான் நிற்கிறானோ..? நின்ற நிலையில் திரும்பிப் பார்ப்பவன் சுசிலாவை பார்வையாலேயே அழைக்கிறான். ஓடுகிறாள்.

"என்ன தம்பி?"

"அது பேசுனது காதுல உழுந்திச்சு. நாங்களும் மனுஷங்கதான். சொல்லப் போனா என் அம்மாவுக்கு பானுவை மருமகளாக்கிக்கற அளவுக்கு விசாலமான மனசு உண்டு. அண்ணன் பொண்ணு ஒண்ணு அடுப்புல கருகறது பத்தி அவளுக்குத் தெரியாம இல்லை.

"இந்தக் கூட்டத்தோட ஒட்டப் பார்த்து முடியாம போய் புழுங்கறத விட அல்லாவே எல்லாம்னு வந்துட்டா அவளுக்கு ரொம்ப நல்லது. ஏன்னா எங்ககிட்ட ஈரம் இன்னும் வத்திப் போகலை. யோசிச்சு முடிவு பண்ணச் சொல்லுங்க... அதுக்கு தாத்தா சாவு ரொம்பவே உதவி செய்யும்னு நான் நினைக்கறேன்."

- இஸ்மாயில் பேசி விட்டு போய் விட்டான். ஆனால் பானு...?



"அடியே இங்க வாடி..."

"என்னக்கா...?"

"என்ன பண்ணப் போறே?"

"இதென்னக்கா எனக்கு தர்மசங்கடம்..."

"பரீட்சைன்னே சொல். எழுதி பாஸ் பண்ணப் போறியா? இல்லை எழுதவே போறதில்லியா?"

"எனக்கு ஒண்ணுமே புரியலை. ஒரு பக்கம் பாட்டி. நான் அந்த தாத்தாவை சரியா பாத்தது கூட கிடையாது..."

"பானு... நான் உன் நல்லதுக்குத்தான் சொல்வேன். கேட்பியா?"

"என்னக்கா...?"

"போடி... போய் தலைய காமிச்சுட்டு வா. இந்தக் கிழவி இன்னிக்கோ நாளைக்கோன்னு இருக்கா. இவ போயிட்டா உனக்கு யாரிருக்கா? அவங்கள்ளாம் இருக்காங்கறது வெளிய தெரியட்டும்."

"ஐயோ... வேண்டாம்கா! ஏற்கெனவே என் கடைக்கு ஆசாரம் பாக்கறவங்க வர்றது கிடையாது. அப்புறமா துப்புரவா ஒதுக்கிடுவாங்க. மோகனும் அப்புறம் திரும்பிக் கூட பாக்காது..."

"மோகனை விடு... அந்த தாமு மாதிரி ஆளுங்க உன்னை இப்ப என்ன வேணும்னாலும் செய்ய முடியும்கற நிலை இருக்கு. அதுக்கு ஒரு கவசம் வேணும்டி... மொதல்ல அந்த நாய் நரிங்ககிட்ட இருந்து தப்பிச்சு நில்லு..."

"மோகன்...?"

"உனக்கும் அவனுக்கும்தான்னு முடிச்சு போட்டுருந்தா யாராலையும் மாத்த முடியாது. நல்லா தெரிஞ்சுக்கோ."



**"நேத்து நான் கடைத் தெருவுக்குப் போய் காபிப்பொடி வாங்கிட்டுத் திரும்பி வந்துக்கிட்டிருந்தப்போ, ரெண்டு பேரு மோட்டார் பைக்ல வேகமா என் பக்கத்திலே வந்து.....**

**"கழுத்துச் செயினை அறுத்திட்டுப் போயிட்டாங்களா?"**

**"ம்ஹூம். காபிப் பொட்டலத்தைப் பிடுங்கிட்டு போயிட்டாங்க!"**

**— டி.என். பாலகிருஷ்ணன்**

– பானு தயங்கித் தயங்கி அங்கீகரிக்கிறாள். அப்பொழுது பார்த்து பழனியின் வருகை.

"என்ன பானு... கிழவிக்கென்ன... போய்ச் சேராம உசுரை வாங்குதா?" – உரிமைப்பட்ட கேள்வியோடு மளமளவென்று அமுக்கிப் பார்த்து, பெரிய எம்பிபிஎஸ் கணக்காய் கித்தாப்பு காட்டி விட்டு ஒரு ஊசி ஏற்றுகிறான்.

ஊசி போடும் போது மந்தாவிடம் உணர்ச்சியே இல்லை.

"என்ன மந்தா ஊசி போட்டேனே வலிக்கலையா?"

"ஒண்ணும் தெரியலியேப்பா... போட்டியா என்ன?"

"அப்படி கேளு... பானு கொஞ்சம் வா..." – எழுந்து வாசலுக்கு வந்து அவிழ்ந்த வேட்டியை சரிசெய்தபடியே பேசுகிறான்.

"நல்லா கவனிச்சுக்க பானு. ஆசைப்பட்டத கொடு. என் கணக்குக்கு பத்து நா தாங்குனா ஜாஸ்தி..."

"ஐயோ... பெரிய ஆஸ்பத்திரி கீஸ்பத்திரியில காட்டுனா..."

"வெட்டி அலைச்சல். காமாலை கரை மீறிப் போச்சு. கண்ணுக்கு மருந்துனு கண்டசனியனைக் கொடுத்ததுல உடம்புல ஒரே குளறுபடி. எம் பேச்சுல நம்பிக்கை இல்லாட்டி போய்ப் பார்த்துட்டு வாங்க..."

– பழனி சில்லறைக்காக நிற்கிறான். சுசிலா சேலை முந்தியில் முடிந்து வைத்ததை எடுத்துத் தருகிறாள்.

"சரி சரி, நீ சாவுக்குப் போய்ட்டு வந்துடு... நானும் திருப்பதி போறேன். இரண்டு நாள்ல, வந்துடுவேன். மந்தனை அந்த சாமிதான் பாத்துக்கணும்."

– சுசிலா கிளம்புகிறாள். அந்த நிலையில் பானுவுக்கு அனைத்தையும் ஒதுக்கிவிட்டு அழ வேண்டும் என்று மட்டும் தோன்றியது!

திருப்பதி பஸ் ஒரு சிலிர்ப்பு சிலிர்ப்பியடி கிளம்பத் தொடங்கியது. பஸ்ஸின் மரை கழன்ட சிட்டுகள் எலிக்கூட்டம் கபடி விளையாடுகிற மாதிரி சப்தம் போட, ஒரு கண்ணாடி அடைந்தால் இன்னொன்று அடையாமலை சண்டித்தனம் செய்தது.

பஸ்ஸில் அமர்ந்த சுசிலாவுக்குப் பழைய நினைவுகள் திரண்டு வந்தன.

"நீ கவலைப்படாதே... ஸ்ரீதேவி ராதிகால்லாம் எனக்கு நல்ல பழக்கம். மேக்கப் போட்டாத்தான் அவங்க எடுப்பு. நீ போடாமலே எடுப்பு..." – சுருதி ஏற்றிக் கொண்டே வந்தானே

தாமு!

சினிமா என்றாலே அது ஒரு சுந்தர உலகம் என்கிற நினைப்பும் அவர்களின் தர்பார்களும் மூட்டிய மயக்கம், அன்று ரத்தத்தில் இருந்த தால் தாமு பேசுவதெல்லாம் வேதமாகவே இருந்தது.

இளம்பியது உயிர்த் தோழி பத்மாவதிக்குக் கூட தெரியாது... அவளும் சினிமா பார்த் திருந்தபோதிலும் சுசிலா அளவு கரைதல் இல் லாத திடம் இருந்ததால் அவள் பாதை வேறாகி விட்டது.

ஒட்டு கேட்டு எம்ஜிஆரும் சிவாஜியும் அம்மாபேட்டை மெயின்ரோடில் ஜீப்பில் வந்த தும் - ஜனக்கூட்டம் அவர்களைத் துரத்தியதை யும் நினைத்துப் பார்க்கிறாள்.

வசந்தா, ராதா, அம்சவேணி, கோகிலா எல் லாம் கூட தங்கள் பாடப் புத்தக நோட்டில் கமலஹாசன் நடித்த படத்துண்டுகளை வைத் திருந்தார்களே...?!

"கமல் ஒரு வித்தியாசமான ஆர்ட்டிஸ்ட். நல்ல லேடி ஆர்ட்டிஸ்ட்டே இப்ப இல் லைன்னு சொல்லி என்கிட்ட வருத்தப்பட்டுக் கிட்டிருந்தார். எனக்கு உன் ஞாபகம் வந்துச்சு..."

- ஒரு சிகரெட்டை செருகி புகை துப்பியபடி. பொய்யும் துப்பினான் அன்று தாமு.

"அப்படியா...?" - சுசிலா கேட்ட நொடியில் போஸ் மைதான சாலை வளைவில், கமலஹாசனும் ஸ்ரீதேவி யைக் கட்டியணைத்தபடி 'குரூ'விற்காக குறுகுறு என்று சுசிலாவை பார்க்க, "நல்ல சகுனம்..." என்று தாமு பொறி பிசகாமல் பத்த வைக்கிறான்.

சுசிலா இமயம் பார்த்த தில்லை. ஏறியதில்லை. அந்த நொடியில் ஏறி விழுகிறாள் அதன் மீது.

"சுசீ... பெரிய ஸ்டாராயிட்டா இந்த தாமோதரனை மறந்துடாதே.."

"ச்சீச்சீ..."

"இப்ப அப்படித்தான் சொல்வே. ஆனா அப்ப நிழலைக் கூட தொட விடமாட்டே."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. முதல்ல ஸ்டாராகறேனான்னு பாக்கலாம்."

"இந்த சந்தேகம்தானே வேண்டாங்கறேன். அடுத்து நீ திரும்பும்போது திருச்சி வரை ஃபிளைட். அப்புறமா பிளைமூத் கார். இதே போஸ் மைதானத்துல நட்சத்திர இரவு எல்லாம் தூள் கிளப்பப் போறே பார்."

"நெஜமாவா?"

"ஆமா... சம்பளத்த எப்படி கேப்பே...? நெம் பர் ஒன் அக்கௌண்ட்லையா? டூவிலையா?"

"அப்படின்னா...?"

"தத்தி! தத்தி! ஒண்ணுன்னா அரசாங் கத்துக்குத் தெரிஞ்சி. இரண்டுன்னா தெரி யாம..."

"தெரிஞ்சே வாங்கிட்டுப் போறது..."

"அப்படியா... வரி எவ்வளவு கட்ட வேண்டி இருக்கும் தெரியுமா?"

"வரியா?"

"ஆமா... நூத்துக்கு அறுபதோ எழுபதோ வரியா கட்டணும். லட்சத்துக்கு எழுவ தாயிரம்!"

"ஐயோ... அவ்வளவா?"

"அதனாலதானே பார்லிமெண்ட்ல மந்திரி யும் அவ்வளவு பாக்கி இவ்வளவு பாக்கின்னு வறட்டு கத்து கத்தறாரு! எனக்குத் தெரிய ஹேமமாலினிக்கு எழுபது லட்சம், ஜெயப் ராதாக்கு ஒரு ஐம்பத்தி நாலு..."

சுசிலா வாய் பிளக்கிறாள். முடிந்தால் யார் வேண்டுமானாலும் நுழையலாம்! பஸ்சும் புளியமரச்சாலையில் அயோத்யா பட்டணம் தொடுகிறது. விளக்கணைப்பு இருட்டு என்கிற அம்சங்களின் இழையில் மெள்ள அவள் தோள் மேல் கை போடுகிறான். அவளை ஏற் கெனவே லட்சத்தில் புரட்டியதில் நன்றாக வெந்திருந்தாள். இப்பொழுது குழைந்து கொடுத்தாள்.

"சுசீ கொஞ்சம் வளைஞ்சு கொடுத்துப்போ... உன்னை உச்சிக்குக் கொண்டு போயிடறேன்..." என்றான்.

கொண்டு போய் விட்டான்! பக்குவமாய் பயன்பட வேண்டிய சந்தோஷ சாதனம் சுசி லாவை ஒரேயடியாய் கொண்டு போய் விட் டது. அதன்பின் என்ன செய்தும் சமூக ஒட்டுறவு நிகழவேயில்லை.

'பெண்ணுக்கு மயக்கம் கூடவே கூடாது.



"பழைய கேஸை யெல்லாம் தூசி தட்டி எடுக்க வேண்டியதுதான். அதுக்காக இப்படியா?"

"ஏன், என்னாச்சு?"

"குபேரனுக்கு எப்படி அவ்வளவு செல்வம் வந் ததுன்னு விசாரிக்கணும்னு எதிர்க்கட்சிக்காரங்க மனு கொடுத்திருங்கா

— டிஎன். பாலகிருஷ்ணன்

சுசிலாவுக்குத் தாமதமாக ஞானம் வருகிறது. அப்படியே, தாமுவின் கைகளில் பானு அகப்பட்டு விடக் கூடாது என்கிற கவலையும் சேர்ந்து கொள்கிறது.

நினைவலைகளில் மீண்டு கைகூப்புகிறாள். 'பெருமாளே அந்த பெண்ணுக்கு ஒரு நல்ல வழியைக் காட்டுப்பா...'

படுக்கையில் அப்படியும் இப்படியுமாய் புரண்டு கொண்டிருந்தவர்கள் எல்லாம் சப்தம் கேட்டு எழுந்து கொள்ள, அந்தக் கூட்டத்தில் மோகன்ராமும் இருந்தான். எரிச்சல் தாங்காமல் வெளியே வந்தான். வந்த வேகத்தை கனகா தணித்தாள். வாசலில் பெரிய கோலம் போட்டு முடித்துக் கொண் டிருந்தாள்! கோலத்தை விடவும் குளித்து முடித்த கோலத்தில் ஈர்க்கும் பவித்ரம் மின்னியது. ஒரு கால் ஊனம் ஒரு பொருட்டே யில்லை என்கிற மன உறுதியோடு... கோலம் போட்டு முடித்த கையோடு காதைப் பொத்திக் கொண்டு உள் ஓடி வந்தாள் அவள். ஆச்சரியமாய் இருந்தது அவனுக்கு. வீதியே ரசிக்கும் லவுட் ஸ்பீக்கர் இசையை இவள் மட்டும் வெறுக்கிறாளே...? அவன் கேட்க நினைத்ததை மகாலட்சுமி கேட்கிறாள்.

"ஏம்மா... உனக்கும் பாட்டுன்னா பிடிக்காதா?"

"இல்ல அத்த... இப்படி அரக்கத்தனமா காலங்காத்தால சத்தமா கேக்கறது பிடிக்காது..."

"மோகனும் இப்படித்தான். பக்தின்னா அமைதி. ஆனா இங்க சப்தத்தை பக்திங்கறாங்களேம்பான்..." - குறுக்கில் நுழைந்தது அடுத்த பாட்டு. "முஸ்தபா முஸ்தபா டோன்ட் ஒர்ரி முஸ்தபா..." என்றது.

தலையிலடித்துக் கொண்டு கொல்லைப் பக்கம் சென்றான் அவன். அதைப் பெரிதும் ரசித்தாள் கனகா. ரசனை ஒன்றுபடுவதில் ஒரு சந்தோஷம்!

ஆனால் வந்து பல நாளாகியும் இன்னும் அவன் நேருக்கு நேர் நின்று நான்கு வார்த்தை பேசாத வருத்தம், உடனடியாக அந்த சந்தோஷத்தைக் கலைக்கிறது. மகாலட்சுமி புரிந்தது போல் ஒரு துண்டை எடுத்து அவள் வசம் தந்து மோகனிடம் கொண்டு தரச் சொல்கிறாள்.

கனகாவும் சந்தோஷமாக துண்டுடன் முன் செல்கிறாள். முகம் கழுவி வாய் கொப்பளிப்பவன் எதிரில் நீட்டுகிறாள்.

"தேங்க்ஸ்... நீ எதுக்கு எடுத்துக்கிட்டு வரே - அம்மா இல்லை...?" - அப்பாடா பேச்சை ஆரம்பித்து விட்டான்.

"ஏன், நான் கொண்டு வந்து தரக்கூடாதா?"

"இந்த காலோட எவ்வளவுதான் சிரமப் படுவேன்னு சொன்னேன்?"

"இதெல்லாம் சிரமமா?"

"இல்லியா பின்னே... வாசல் தெளிச்சு கோலம் போட்டு வீடு கூட்டி..."

"அது பெண்களோட கடமையாச்சே..."

"பலே... வாழ்க உன் கடமை உணர்ச்சி! கட்டிக்கப் போறவன் கொடுத்து வெச்சவன்" - சற்று ஜாலி மூடில் மோகன்ராம் பேசுவது பாட்டு சப்தத்தில் அவள் காதில் 'நான் கொடுத்து வைத்தவன்' என்று விழுந்ததோ என்னவோ? முகம் கொள்ளாத புன்னகையில் மகாலட்சுமியைப் பார்க்கிறாள்.

"அம்மா என்னால ஒரு நிமிஷம் இந்த வீட்ல இருக்க முடியாது. ரேணுகா அம்மன் வரம்லாம் கொடுத்துட்டுப் போற வரை நான் நாமமலை ஆஸ்ரமத்துக்குப் படிக்கப் போயிட்டு வரேன். சாப்பாடு தண்ணி எதுக்கும் கவலைப்படாதே, நான் பாத்துக்கறேன்."

பேச்சோடு வேகவேகமாக புத்தகக் கட்டுக்களை எடுத்து ஒரு பையில் போட்டுக் கொண்டு கிளம்பியே விட்டான்.

"இவனோட இப்படித்தாண்டி... ஊருக்கெல்லாம் ஒரு வழி - இவனுக்கு ஒரு வழி..." - மகா சலித்துக் கொள்வதுபோல் பெருமிதப்படும்போதுதான் அந்தச் சேதி வந்தது.

மந்தா கண்மூடி விட்டாள்!

(தொடரும்)



**"உன்னோட நாடகத்தல மந்திரியைப் பார்த்துக் கோபமாகப் பேச புதுசா ஒரு வசனம் சேர்த்திருக்கியா? என்னது?"**

**"என்னோடு கோவிலுக்கு வந்தாயா, கற்பூரம் ஏற்றினாயா, பொங்கல் வைத்தாயா, விரதம் இருந்தாயா அல்லது குண்டம் தான் இறங்கினாயா?....**

**— செ. ஆசைத்தம்பி**

# 'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ...'

அட்டைப் படம் அழகு; ஆரம்பித்த தொடர்கள் அழகு; அறிவித்த போட்டியில் செய்திட்ட புதுமை அழகோ அழகு!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

ஈஸ்வர ஆண்டின் தொடக்கமாக முகிழ்த்திருக்கும் அழகுச் சிறப்பிதழ் கல்கி. 'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ...?' என்பது போல் பூத்துக் குலுங்கும் புதுமண மலரென வியந்து பாராட்டும் வண்ணம் மிளிர்ந்துள்ளது!

கே. கழுகாசலபுரம், எஸ்.ஏ. கேசவன்.

இருபது அழகு மொழிகளும், இருபத்தியோராவது அழகு விழியும் உள்ளத்தில் தங்கித் தேனாய் இனிக்கிறது.

மதுரை - 10, எல்.எம். மகாநந்தினி.

நெற்றியில் அடித்தாற் போல் தலையங்கக் கேள்வி. சரியான வாதங்களை வைக்காமல் உப்புப் பெறாதவற்றைக் குற்றங்களாக அடுக்கி ஐ-மு.க்கான ஆதரவை வாபஸ் பெற்றது காங்கிரஸ் பேரியக்கத்திற்கு ஒரு பின்னடைவு என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. ஏற்கெனவே பல மாநிலங்களில் தோல்விக் குழியில் காங்கிரஸ் விழுந்து விட்ட நிலையில், நாட்டின் ஸ்திரத்தன்மையைத் தேவையில்லாமல் அசைத்துக் காட்டுவதில், ஒரு பாரம்பரிய கட்சிக்கு என்ன பெருமை இருக்க முடியும்?

விராலிமலை, ச.நாகராஜன்.

அமரர் தி.ஜானகிராமனின் 'உயிர்த்தேன்' நாவல் கதாநாயகன் பூவராகன், தன்னுடைய சொந்தச் செலவிலேயே கோவிலைப் புதுப்பித்து, குடமுழுக்கு நடத்தி, சுற்றுப்புற கிராமத்தினருக்குப் பந்தி பந்தியாக விருந்து படைக்கிறான். நாவல்களில் மட்டுமே இது சாத்தியம் என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் வாழ்க்கையிலும் சாத்தியமே என்று நிருபித்துவிட்ட வைத்தியநாதன்-கிருஷ்ணமூர்த்தி சகோதரர்களுக்கு உமையவளின் பரிபூரண அருள் கிடைக்கப் பிரார்த்திக்கிறோம்.

வேலூர் - 6, எல்.கோபாலகிருஷ்ணன்.

"பத்தாயிரம் ரூபாய் பட்டுப் புடவை" கதையில் பாலு எடுத்த முடிவு அருமை. வேலைக்குப் போகும் ஒவ்வொரு பெண்ணும் பாலுவைப் போல் இருந்து விட்டால் போதும்! ஆண்கள் தானாகத் திருந்தி விடுவார்கள்!

மேலப்பாதி, என். ராஜி.

'எல்லா அரசியல்வாதிகளும் மக்களை ஏமாற்றுகிறார்கள்; அவர்கள் எப்படி ஏமாற்றுகிறார்கள் என்பதில்தான் வித்தியாசப்படுகிறார்கள்' என ஓர் அறிஞர் கூறியதைத்தான் நினைவு படுத்துகிறது, ஜெ - வை.கோ.வின் புதிய கூட்டணி!'

கோவை - 30, பி.எஸ்.என்.

கல்கியின் சுதந்தர பொன் விழா மலரை ஆவலுடன் வரவேற்கிறோம்; எதிர்பார்க்கிறோம். விவரங்களை அறியத் துடிக்கிறோம்.

திருச்சி - 8, தி.மா.தமிழழகன்.

முன்னாள் அமைச்சர் க.ராசாராம் அவர்களுக்கு இருதய அறுவை சிகிச்சை நடைபெற்றதை நேர்முக வர்ணனை போன்று எழுதியமைக்குப் பாராட்டுக்கள்!

சேத்துப்பட்டு - 1, பா.குணா.

ஒளிப்பதிவு செய்வதில் மட்டும் நாங்கள் திறமைசாலிகள் அல்ல. பாதித்த விஷயத்தை அழகுபடச் சொல்வதிலும் திறமைசாலிகள்தான் என ஒவ்வொரு கேமராக் கலைஞரும் நிருபணம் செய்து விட்டார்.

திருப்பூர் - 1, ப. சங்கர்.

'வாய்விட்டுச் சிரித்தால் நோய் விட்டுப் போகும்' என்பது பழமொழி. சிரிப்பின் மூலம் ஓர் ஏழைக் குடும்பத்தைச் சிறப்பாக வாழ வைக்க முடியும் என்பது கல்கி மொழி.

மோகனூர், மாணிக் செந்தில்.

# பதினொன்று, பத்து, ஒன்பது...

''அண்ணே.. தண்ணி வைச்சாச்சு. நீங்க குளிக்கலாம்'' என்றபடி அறை வாயிலில் வந்து நின்றான் அழகு.

"டேய் அழகு... ஓடிப் போய் ஒரு பாக்கெட் வில்ஸ் வாங்கிட்டு ஓடி வா பார்க்கலாம்..." புகை மண்டலத்திற்கு நடுவிலிருந்து குரல் வந்தது.

''அண்ணே காசு...'' என்று இழுத்தான் அழகு.

"எல்லாம் அக்கௌண்ட் இருக்குதில்லை... கனகராஜுன்னு சொல்லி வாங்கிட்டு வாடா..."

"இல்லண்ணே... பழைய பாக்கி நெறய நிக்குதாமா... அதைக் குடுத்திட்டு அப்புறம் புதுசா வாங்கிக்கச் சொன்னாருண்ணே..."

அதற்குள் தர்மராஜ் குறுக்கிட்டு, 'கனகு, போதுண்டா விளையாட்டு... எழுந்திருச்சுப் போய் குளிச்சுட்டு வந்துரு... இன்னிக்கு உங்க சித்தப்பா வர்றேன்னிருக்காரு. மறந்துட்டியா? அவரு வர்றப்ப ரூம் அசிங்கமாக் கிடந்தா என்ன நெனப்பாரு?" என்றான்.

''அடடே... மறந்தே போயிட்டேன். நல்ல வேளை ஞாபகப்படுத்தினே...'' என்றபடி ஆட்டத்தை முடித்து எழுந்தான் கனகராஜ்.

''தருமன் மாதிரி நமக்கொரு செகரட்டரி இருந்தா லைஃப்ல கவலையே இருக்காதுடா." மற்றவர்களும் எழுந்து கலைய, அறை புகையினின்றும் விடுதலை பெற்றது.

துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு 'வாடா அழகு' என்று சிறுவனை அழைத்துக் கொண்டு நடந்த தருமராஜ், கொஞ்ச நேரத்திலேயே திரும்பி வந்தான்.

சவரம் செய்து கொண்டிருந்த கனகராஜ் வியப்போடு, ''என்ன தருமா, இவ்வளவு சீக்கிரம் குளிச்சிட்டே? காதுகிட்ட அரப்பு இன்னும் இருக்கு பாரு..." என்றான்.

மேசை மின்விசிறியைப் போட்டுக் கொண்டு எதிரில் அமர்ந்த தருமராஜின் முகம் கடுகடுவென்றிருந்தது. சவரம் செய்வதை நிறுத்திவிட்டு அருகில் வந்த கனகராஜ், "என்னடா நடந்தது?" என்றான்.

"இந்தப் பையன் அழகுக்கு எத்தனை வயசிருக்கும்?"

"ஒரு பத்தோ பதினொண்ணோ இருக்கலாம். ஏன்?"

"பதினோரு வயசுப் பொடியன்.. இவன் வயசில நான் ஆறாங்கிளாஸ் படிச்சுக்கிட்டு இருக்கேன். போஸ்ட் பாக்கன்னு என் ட்ரவுசர்ல பசங்க காகிதத்தை மடிச்சுப் போட்டாங்கன்னு அழுதுகிட்டே வீட்டுக்கு வந்தேன். மூணு நாள் ஸ்கூலுக்குப் போகாம அழுது ஆகாத்தியம் பண்ணி புதுசு தெச்சுப் போட்டுக் கிட்டுத்தான் போனேன்... அவ்வளவு தான் பக்குவம் அந்த வயசுல... ஆனா இவனைப் பாரு... ஏதோ இல்லாத கொடுமைக்கு இந்த மேன்ஷன்ல ரூம்பாயா வேலைக்கு வந்திருக்கான். பீடி, சிகரெட், ஏன் பீர் கூட வாங்கிட்டு வந்து கொடுக்கறான்.. போகட்டும்.. ஆனா இது ரொம்ப அதிகம்... என்னால தாங்க முடியலை..."

"விஷயத்தைச் சொல்லாம புலம்பினா என்னடா அர்த்தம்? என்ன நடந்தது?"

"நேத்திக்கு இவன்கிட்ட கே.எஸ். வாங்கிட்டு வரச் சொல்லியிருக்காங்கடா பதினெட்டாம் ரூம்ல... ச்சே!"

''அடப்பாவிகளா! உனக்கெப்படித் தெரிஞ்சது?"

"அழகு கேட்கறான் என்கிட்ட... அண்ணே கே.எஸ்னா என்னான்னு... அறைஞ்சன்னா படவான்னு கையை ஓங்கினேன். இல்லண்ணே, நேத்து கோபியண்ணனும் அவரு கூட்டாளிகளும் ராத்திரி பதினோரு மணிக்கு என்னை எழுப்பி முக்குல ஐயப்பா மெடிக்கல்ஸ் போய் உடனே வாங்கிட்டு வான்னு சீட்டில எழுதிக் கொடுத்து விட்டாங்க. வாங்கிட்டு வந்து கொடுத்தேன்னான்."

''தருமா, ஆச்சர்யமாயிருக்கு. பிராந்தி, விஸ்கி ஏன் கஞ்சா கூட நடமாடுது இந்த லாட்ஜுல... நாயுடு அதெல்லாம் கண்டுக்க மாட்டாரு. ஆனா பொம்பளைங்க சமாசாரம் நடக்க விட மாட்டாரே. அதுவுமில்லாம அவரைத் தாண்டி மேலே வரவும் முடியாதே..!"

''என்ன இழவோ.. இங்கயே வைச்சு கிட்டாங்களோ, இல்ல வேற எங்கயாவது போனாங்களோ, அது நம்ப பிரச்னையில்லை, விடு... ஆனா இந்தப் பையன் இந்தச் சூழ்நிலையில

இருக்கக் கூடாது. சீக்கிரம் எல்லாம் தெரிஞ்சுக்கிட்டு பிஞ்சில பழுத்ததாயிருவான். நாளைக்குக் கிரிமினல் ஆகவும் வாய்ப்பு இருக்கு. ப்ச்... படிக்க வேண்டிய வயசு... கொடுமைடா... ஏதாவது ஸ்கூல்ல சேர்த்து விட்டுரலாமான்னு பார்க்கறேன்..."

"தருமா... இது உனக்கு வேண்டாத வேலை. அழகோட அம்மா அவனை நாயுடுகிட்டே கொண்டாந்து விட்டுருக்காங்க. மாசா மாசம் சம்பளப் பணம் வாங்க இங்க வர்றாங்க. நீ பாட்டுக்கு ஸ்கூல்ல சேர்த்து விட்டுர்றேன்னா அவங்கம்மாவுக்கும் நாயுடுவுக்கும் என்ன பதில் சொல்வே? அழகோட சாப்பாட்டுக்கும் படிப்புக்கும் நீயா தரப் போற? முதல்ல உன்னை இந்த மேன்ஷன்லயிருந்து தூக்கிருவாங்க. கோயம்புத்தூர்ல இந்த ரேட்டுக்கு வேற இடம் கிடைக்காம நீதான் ரோடு ரோடா அலையப் போற... ஜாக்கிரதை..."

"கனகு... நீ சொல்றதெல்லாம் சரிதாண்டா... அழகோட படிப்புக்குச் செலவு பண்ற நிலைமையில நான் இல்லை... ஆனா அவன் இனிமே இங்க இருக்கக் கூடாது, எனக்கு மனசு கேக்கலை. எனக்குத்

# தாமரை

தெரிஞ்ச ஒரு ஃபாதர் இருக்கார்... ஆசீர்வாதம்னு.. அவரு சர்ச்சுக்கும் மிஷனரி ஸ்கூலுக்கும் நான்தான் முழுக்க வயரிங் வேலை செய்து கொடுத்தேன். பரமதிருப்தி அவருக்கு... அங்க அழகை சேர்த்துக்குவாரான்னு கேட்டுப் பார்க்கறேன்.."

"சரி, சேத்துக்குவார்னு வைச்சுக்கலாம்... நாயுடுகிட்ட என்ன சொல்லி அழகை கூட்டிக்கிட்டுப் போகப் போற? அவங்கம்மாகிட்ட எப்படி சொல்லப் போற?"

"அதுக்கெல்லாம் நீதாண்டா வழிசொல்லணும். எனக்கு அத்தனை யோசனை இல்லை..."

"தருமா, இது அழகோட பிரச்னையில்லை. ஒரு சமூகப் பிரச்னை.. நீயோ நானோ வருத்தப்பட்டு ஒன்னும் ஆகப் போறதில்லை. நம்ப பொழப்புதான் கெடும்.. சமூக சேவையெல்லாம் பணக்காரங்க சமாசாரம்... நமக்குக் கட்டுபடியாகாது. வேணும்னா நைசா நாயுடுகிட்டப் போட்டுக் குடுத்துரலாம், இந்த மேன்ஷன்ல இப்படி நடக்குது கவனிங்கன்னு..."

தருமராஜ் ஒப்புக் கொள்ளவில்லை. பையனை அங்கிருந்து அகற்றியே ஆக வேண்

இரண்டு பக்க

சிறப்புச் சிறுகதை

டும் என்று பிடிவாதம் பிடித்ததால், வேறுவழியின்றி கனகராஜ் அன்றிரவு பூரா யோசிக்க வேண்டியதாயிற்று.

மாதம் ஒருமுறை ஊர் போய் வர அழகுக்கு அனுமதி உண்டு. பஸ் கட்டணம் மட்டும் கையில் கொடுத்து நாயுடுவே பஸ் ஏற்றி விடுவார். மறுநாள் காலை உடல்நிலை சரியில்லை, ஊருக்குப் போய் வருகிறேன் என்று அழகுவை நாயுடுவிடம் சொல்ல வைத்து, அவனை பஸ் ஏற்றி விடுகிற பொறுப்பை யதேச்சை போல தருமராஜ் ஏற்றுக் கொண்டான். அன்றைக்குச் செய்ய வேண்டிய கலாஜ் ஆர்க்கேட் வயரிங் வேலைக்கு மட்டம் போட்டுவிட்டு அழகுவை அழைத்துக் கொண்டு புலியகுளம் கிளம்பினான்.

அலுத்துக் களைத்து இரவு விடுதி திரும்பியபோது மணி பத்தரை. கனகராஜ் தூங்காது விழித்திருந்தான்.

"இன்னிக்குப் பெரிய அட்வென்ச்சர்டா கனகு... ஃபாதர் ஸ்கூல்ல சேர்த்துக்கறேன்னாரு. தன் சொந்தப் பொறுப்பில செலவ ஏத்துக்கறேன்னாரு. ஆனா பையன் ஊருக்குப் பணம் அனுப்பணும்ங்கறதிலேயே குறியா இருக்கான். ஒருவழியா சர்ச்ல வேலை, ஒழிஞ்ச நேரத்தில படிப்பு சொல்லிக் கொடுங்கன்னு விட்டுட்டு... அதென்ன... ஆங்.. கொண்டிசெட்டிபட்டி... அதான் அவங்க ஊருக்கு மூணு பஸ் மாத்தி விசாரிச்சு விசாரிச்சு போய்ச் சேர்றதுக்கு சாயந்திரம் ஆயிடுச்சு. வயல்ல கூலி வேலை செய்துக்கிட்டிருந்த அவங்கம்மாவைக் கண்டு பிடிச்சு ரொம்ப நேரம் பேசி அவங்களைக் கன்வின்ஸ் பண்ணிக் கிளம்பி வர இத்தனை நேரமாயிடுச்சு. திடீர்னு லீவு எடுத்ததுக்கு என் முதலாளி கோவிச்சுக்குவாரேன்னு இப்பதான் கவலையாயிருக்கு... இருந்தாலும் ஒரு நல்ல காரியம் பண்ணினதுல மனசு நிறைவாயிருக்கு... அப்புறம் நான் இன்னும் சாப்பிடலை... பசி கொல்லுது... ஏதாவது இருக்கா?"

"பரோட்டா வாங்கி வச்சிருக்கேன், சாப்பிடு... பால் கொண்டாரச் சொல்றேன். அதிருக்கட்டும்... உனக்கு இந்த ஃபாதரைத் தவிர வேற ஃபாதர், இல்லாட்டி ஏதாவது பள்ளிக்கூட ஹெட்மாஸ்டரைத் தெரியுமா?"

"தெரியாதே... ஏன்?"

"ஒண்ணுமில்லை.. இரு... அண்ணாமலை, அண்ணாமலை" என்று இருட்டைப் பார்த்துக் குரல்கொடுத்தான்.

தூக்கக் கலக்கத்தோடு மாடி வளைவிலிருந்து வெளிப்பட்ட ஒல்லியான, கறுத்த சிறுவன் அறைவாசலில் வந்து நின்றான். பரமதரித்திரம் என்பது தெரிந்தது.

"புது வரவு. உன் வயசு என்னடா?" என்றான் கனகு.

"எட்டு" என்ற குரலில் இன்னமும் மழலை மிச்சமிருந்தது.

## இரண்டு பக்கச் சிறுகதைப் போட்டி முடிவு

இரு பக்கச் சிறுகதைப் போட்டிக்கு ஆயிரக்கணக்கில் கதைகள் அனுப்பி எங்களைத் திணறச் செய்துவிட்ட வாசக எழுத்தாளர்களுக்கு முதலில் நன்றி.

கீழ்க்கண்ட ஐந்து சிறுகதைகள், வந்தவற்றுள் மிகச்சிறந்தவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. எழுதிய ஆசிரியர்களுக்கு மனமார்ந்த பாராட்டுக்கள்.

**1. பதினொன்று, பத்து, ஒன்பது...**
*தாமரை*
*22, சக்தி லே-அவுட்,*
*கிங்ஸ் காலனி,*
*வீரகேரளம்,*
*கோவை – 641 007.*

**2. அலட்சியம்**
*பலராம் செந்தில்நாதன்*
*22, P & T காலனி,*
*கவுண்டம்பாளையம்,*
*கோவை – 641 030.*

**3. ஒத்தாசை**
*சுப்ரமணியன் ரவிச்சந்திரன்*
*30, நடேசன் நகர்,*
*திருப்பாதிரிப்புலியூர் - 607 002.*

**4. மீதி சுதந்தரம்**
**வி. ஸ்ரீகிருஷ்ணன் (ஸ்ரீகி)**
549, (520), 7th Main Road,
11th Cross Street,
Giri Nagar - II Phase,
Bangalore - 560 085.

**5. இயலாமை**
**ஜி. சுபாஷ்,**
*9, ஜி.ஆர்.டி. லே-அவுட்,*
*சுப்ரமணியபுரம்,*
*கோவை – 641 002.*

'பதினொன்று, பத்து, ஒன்பது' சிறுகதை இங்கே வெளியாகியுள்ளது. பிற கதைகள் வரும் வாரங்களில்.

– ஆசிரியர்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1997

கல்கி விலை உட்பட விலை வாசியெல்லாம் எக்கச்சக்கமாக ஏறிவிட்டது! சிறுகதைப் போட்டிக்கான பரிசுத் தொகை மட்டும் ஏறாவிட்டால் எப்படி? ஆகவே

**முதல் பரிசு :**
**ரூ. 2500**

**இரண்டாவது பரிசு :**
**ரூ. 2000**

**மூன்றாவது பரிசு :**
**ரூ. 1500**

ஆக மொத்தம் ரூ. 6000
பரிசுகளாக வழங்கப் பெறும்.



தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 200 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு!

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய**
**கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலை ஒட்டிய, சுயவிலாசம் எழுதிய உறையைக் கதையுடன் கூடவே அனுப்ப வேண்டும். பின்னால், தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள், கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாமல் இருப்பது நலம். ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி,
47. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 97.

நீங்கள் கேட்டவை - தராசு

# ம.தி.மு.க + அ.தி.மு.க. = ?

• இரா. திலிப், திருச்சி – 14.

? பரபரப்பான சூழ்நிலையில், 'லிவிங் இன்ஸ்டிங்க்டுடன்' ஜெயிக்க இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களிடம் திறமை இல்லையே?

! உங்கள் கூற்றைப் பொய்யாக்கி, ஜார்ஜ்டவுனில் கடைசி பந்துக்கு முந்தைய பந்தில் வெற்றியைத் தட்டிக் கொண்டார்களே, திலிப்! இதே சாமர்த்தியத்துடன் கடைசி டெஸ்டிலும் செயல்பட வாழ்த்துவோம்.

• ஜி.ஜி. கிருஷ்ணன், விசலூர்.

? 'புரட்சித் தலைவி கை காட்டினால் சுடுகாட்டுக்கும் செல்லத் தயார்' என்கிறாரே சேடப்பட்டி முத்தையா?

! அங்கே போயும்தான் ஊழல் பண்ணிட்டாங்களே!

• பி. நடராஜன், அன்னூர்.

? உலகத்தை அழிக்க, கொம்பு முளைத்த குழந்தை பிறந்துள்ளதாமே...?

! அந்தக் குழந்தை உலகை அழிக்கிறதோ இல்லையோ, மக்கள் மூளையை மழுங்கச் செய்ய பல பத்திரிகைகள் குவிந்திருக்கின்றன.

• ஆர்.பி. ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்.

? நடந்து முடிந்த லாரி ஸ்டிரைக்கால் யாருக்கு லாபம்? யாருக்கு நஷ்டம்?

! லாபம் யாருக்கும் இல்லை; நஷ்டம்...? தேசத்துக்கும் தேச மக்களுக்கும் கோடி கோடியாக நஷ்டம்!



அக்கறை!





கேரளக் காதல்!

• எம். கதீஜா ஹனீஃபா, திருச்சி - 28.

? இறைவனைச் சுற்றி ஒளிவட்டம் இருப்பதால், கோவில்களுக்கு இலவச மின்சாரம் தேவையில்லை என கலைஞர் சொன்னது நகைச்சுவையா? நையாண்டியா?

! பெரியாரின் தனிப்பட்ட சீடராக இருக்கும்போது வேண்டுமானால் அவர் அப்படியெல்லாம் பேசலாம். ஆனால் எல்லோருக்கும் முதல்வர் என்கிற பொறுப்பிலிருக்கும் போது இப்படிப் பேசுவது அநாகரிகம்.

• பெ. பொன்ராஜ்பாண்டி, மதுரை – 10.

? குடந்தை அருகே பத்து ரூபாய்க்காகத் தம் குழந்தையை மண்ணெண்ணெய் ஊற்றி எரித்துக் கொன்ற பெற்றோரின் கிராதகச் செயல் உங்கள் மனத்தை உலுக்கவில்லையா?

! உலுக்கத்தான் செய்கிறது. ஆனால், சமுதாயத்துக்கு இழைக்கப்படும் கொடுமைகளுக்கும் தனி மனிதர்கள் தங்களுக்கே இழைத்துக் கொள்ளும் கொடுமைக்கும் வித்தியாசம் உண்டு. இத்தகைய மனித உருக் கொண்ட அரக்கர்களைச் சட்டம்தான் தண்டிக்க வேண்டும்!

• எம். ரேவதி, மன்னார்குடி.

? அருணாச்சலம் தேறிவிடுவாரா...?

! விமர்சனங்களில் தேறாமல் போகலாம். ரசிகர்கள் மத்தியில் நிச்சயம் தேறிவிடுவார். தேறாமல் விடமாட்டார்கள்!

• டி.என். இமாஜான், நாகூர்.

? கல்கி பகவான் பற்றி பரபரப்பாகப் பேசப்படுகிறதே...?

! அப்படியொன்றும் தெரியவில்லை; கல்கி பத்திரிகையின் புதுப்பொலிவு, சுவாரஸ்யம் பற்றித்தான் பரபரப்பாக நிறைய பேசப்படுவதைக் கேட்கிறேன்.

• கப்பு வேதையா சித்திரவேலு, கருப்பம்புலம்.

? 'அரசியலை விட்டுத்தான் விலகியிருக்கிறேன்... பா.ம.கவை விட்டு அல்ல...' என பேட்டி கொடுத்துள்ளாரே மன்சூர் அலிகான்...? எனக்கு ஒரே குழப்பமாக உள்ளது!

! நீங்க ஒருத்தர் குழம்பியது போதாதா? எதுக்கு இப்படி ஒரு கேள்வி கேட்டு மத்தவங்களையும் குழப்பறீங்க?

• என். உமாசந்திரன், கோவில்பட்டி.

? 'சந்தன வீரப்பனுக்குப் பொது மன்னிப்பு வழங்குவதைப் பரிசீலிக்க முனைந்திருக்கும் கருணாநிதி, 'ஜெ'வை மட்டும் ஊழல் வழக்கில் சிக்க வைக்க நினைப்பது ஏன்...?'

என்று காளிமுத்து பேசியிருக்கிறாரே...?

! அப்படியானால், வீரப்பனும் 'ஜெ'வும் ஒன்றுதான் என்கிறாரா காளிமுத்து...? பலே! பலே!

● இ. முருகன், மாப்பிள்ளைகுப்பம்.

? 'தமிழ் மக்கள் நிறையச் சாப்பிடுகிறார்கள். எனவே அவர்கள் ரசனைக்குறைவாக இருக்கிறார்கள். வாழை இலையை விரித்து, வகை வகையாகக் காய்கறிகளை வைத்துச் சாப்பிடுவதற்குத்தான் அவர்கள் லாயக்கு. மலையாளிகள் அப்படியில்லை...' – 'என் இனிய தமிழ் மக்களே...' என்று விளித்துப் பேசும் பாரதிராஜா இப்படி தமிழர்களை மட்டந்தட்டலாமா?

! ரசனை என்பது சாப்பாடு உள்பட அனைத்திலும் இருக்க வேண்டும். இது மலையாளிகளுக்கும் நன்றாகவே தெரியும். அவர்களை முகஸ்துதி செய்து ஏமாற்ற முடியாது. பாரதிராஜாவை இதற்குள் அவர்கள் கச்சிதமாக அளந்து வைத்திருப்பார்கள்.

● மல்லிகை மன்னன், மதுரை – 14.

? ஜோதிடரின் ஆலோசனைப்படி மஞ்சள் துண்டு போட்டிருக்கும் கருணாநிதியை உண்மையான நாத்திகராக எண்ணிப் பார்க்க முடியவில்லையே?

! மஞ்சள் துண்டை மர்மமாக்கப் பார்த்தவர்களின் சாயம்தான் வெளுத்துப் போச்சே! விடுங்க சார்!....



• ரசிகர்கள் செய்வார்கள்!



• சுடுகாடு சூளுரை!



• மீண்டும் மீண்டும்...



• பலே! பலே!



• 'குழப்பிஸ்ட்'!

● டி. பசுபதி, ஊஞ்சவேலாம்பட்டி. ❑

? 'எய்ட்ஸ்' பற்றி சமூக அமைப்புகள் பலவும் பிரசாரம் செய்கின்றனவே, இதனால் சிறிதளவேனும் பலன் ஏற்பட்டுள்ளதா?

! பெரிய நகரங்களில் ஓரளவு பலனிருக்கலாம். ஆனால் பின்தங்கிய பகுதிகளில் நிலைமை கவலைக்கிடம். உதாரணம் : பீஹார். இங்கே சமீபத்தில் பேட்டி (டி.வி.) காணப்பட்டவர்கள் பலர், எய்ட்ஸ் குறித்து எதுவுமே அறிந்திருக்கவில்லை. லல்லுவோ, தமது மாநிலத்தில் எய்ட்ஸ் பரவினால் டாக்டர்களை தண்டிப்பதாக மிரட்டியிருக்கிறார்! வேதனை!

● இ.மா. தமிழழகன், திருச்சி – 8.

? ம.தி.மு.க. + அ.தி.மு.க. கூட்டு = ?...

! கொ.அ.மு.க.! (கொள்கை அற்றவர்களின் முன்னேற்றக் கழகம்!)

● ஆர். பிரகாஷ், பொன்மலை.

? அரசியலில் எது மூலதனம்? எது வருமானம்?

! எந்த ஒரு வியாபாரத்திலும் மூலதனமும் பணம்தான்; வருமானமும் பணம்தான். அரசியல் வியாபாரம் இதற்கு விதிவிலக்கல்ல. என்ன ஒரு வித்தியாசம் என்றால், மற்ற வியாபாரங்களைக் காட்டிலும் அரசியலில் பேராசை அதிகம்; அதனால் மோசடியும் அதிகம்!

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி.

? நம்பிக்கை வாக்கெடுப்பு தினத்தன்று ப. சிதம்பரம் பேசியது அற்புதமாக இருந்தது இல்லையா...?

! அற்புதமாக இல்லாவிட்டாலும் நேர்மையாகவும் உணர்ச்சிபூர்வமாகவும் இருந்தது. நாட்டின் ஒட்டுமொத்த நலன் கருதிச் செயல்பட வேண்டும் என்ற அக்கறையுடன் ஒலித்தது.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
டி. பசுபதி,
2/72, ஊஞ்சவேலாம்பட்டி அஞ்சல், பொள்ளாச்சி தாலுகா,
கோவை மாவட்டம் – 642 003.

# TOP ANGLE



**கடவுளை மறுத்தாலும்**
**கோவில் சுவர் சௌகரியம்தான்!**

படம்: கோபிநாத்

# பாலம்

●● ஸ்ரீ சக்ரா பற்றிய விவரம் அதனை அருளிய ஆதிசங்கரர், குறிப்பிட்ட ஸ்தலங்களைத் தேர்ந்தெடுத்த காரணம் - இவை பற்றி அறிய விரும்புகிறேன்.

கே. நித்தியானந்தம்,
48, DGI லே அவுட்,
கொட்டிவாக்கம், சென்னை-41.

●● எச்.ஏ. கிருஷ்ணபிள்ளை எழுதிய "இரட்சணிய யாத்திரிகம்" வீரமாமுனிவர் எழுதிய "தேம்பாவணி" திரு.வி.க. எழுதிய "கிறிஸ்துவின் அருள்வேட்டல்" ஆகிய நூல்கள் விலைக்கு அல்லது இரவலாகத் தேவை.

எல். சங்கரமூர்த்தி,
10E, மின்வாரிய காலனி,
கேசவனேரி சாலை (கிழக்கு),
வள்ளியூர், நெல்லை மாவ, 627 117.

●● உடையார்பாளையம், போர்டு மிடில் பள்ளியில் 45-46ல் என்னுடன் படித்த ஆர். கோவிந்தராஜன் ஐ.பி.எஸ்.(ஓய்வு) அவர்களுடன் தொடர்பு கொள்ள ஆசை. அவர் கொடுத்த சென்னை வாரன் ரோடு விலாசத்துக்கு அனுப்பப்படும் கடிதங்கள் திரும்பி வருகின்றன.

எஸ். ரெங்கநாதன்,
4101/2 Extended MCC
B Block, Pisale Thotta,
Davangere- 577 004.

●● பழைய சித்த மருத்துவ நூல்கள் எதுவானாலும் விலை கொடுத்து வாங்கிக் கொள்கிறேன்.

டாக்டர் க. அரவிந்த்,
சித்த மருத்துவர்,
87, துர்காலயா வீதி, திருவாரூர் - 610 001.

●● கடந்த இரு ஆண்டுகளாக ஹைக்கூ கவிதை பற்றி ஆய்வு செய்து வருகிறேன். ஹைக்கூ கவிஞர்கள் தொடர்பு கொள்ளவும்.

வி.வி. பாலசுப்பிரமணியம்,
16, பட்டேல் தெரு,
சென்னை - 600 033.

●● ஆக்கூர் அனந்தாச்சாரி எழுதிய "கிட்டப்பாவின் கதை" புத்தகமாகவோ, தொகுப்பாகவோ தேவை.

உமா மகேசுவரன்,
"அன்னபூரணி"
வி.வி.ராமன் பிள்ளை சாலை,
தைகாடு, திருவனந்தபுரம்-14.

●● ஏழை, 24 வயது வாலிபருக்கு ஆங்கிலம் எழுதப்படிக்க இலவசமாகக் கற்றுக் கொடுக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளவும்.

த. ரவி,
8, மேலவயல் குளக்கால் தெரு,
தேவகோட்டை - 630 302.

●● 1965ம் ஆண்டு முதல் 1975ம் ஆண்டு வரை கல்கி தீபாவளி மலர்கள் தேவை. சன்மானம் தந்து பெற்றுக் கொள்கிறேன்.



பாலா சங்குபிள்ளை,
21, E.B. காலனி,
காஜாமலை, திருச்சி-23.

●● வெண்குஷ்டம் (லூகோடெர்மா) வந்தவர்கள் ஆரம்ப நிலையிலேயே என்னைத் தொடர்பு கொண்டால், நான் சாப்பிட்ட நாட்டு மருந்து, கடைப்பிடித்த பத்திய முறைகளைத் தெரிவிக்கிறேன். எனக்குப் பூரண குணமாகி விட்டது.

மு.பா. அமல்ராஜ்,
48, அண்ணா தெரு,
திருவான்மியூர், சென்னை -41.

●● 1978ல் வெளியான A Hundred Years of the Hindu என்ற புத்தகம் தேவை.

ஜோ. பாரதிதாசன்,
34, T.E.L.C. காம்பவுண்டு,
அண்ணாநகர் 4-வது குறுக்குத் தெரு,
செங்கல்பட்டு - 603 001.

●● உள்நாட்டு, அயல்நாட்டு தபால் தலைகள் அபூர்வமானவை பல உள்ளன. தபால் தலைகள் சேகரிப்போர் சுயவிலாசமிட்ட தபால் உறை அனுப்பினால் இலவசமாக அனுப்புகிறேன்.

பாலு,
யூனியன் பாங்க் ஆப் இந்தியா,
நாட்ராம்பள்ளி - 635 852.

●● கடல்புறா (சாண்டியல்யன்) முதல் பாகம் மட்டும் தேவை. விலையைத் தெரிவித்தால் பெற்றுக் கொள்கிறேன்.

எம்.ஏ. வேலுசாமி,
K.M.S. நிறுவனம்,
பேரூர் - 608 701.

(பாலம் மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி காரியாலயம் பொறுப்பு ஏற்காது.- ஆர்)



### சிரிக்காதே!

பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் டோனி பிளேயர் தேர்தலில் வென்று அடுத்த பிரதமராக வரும் வாய்ப்புக்களைக் குறைப்பது அவருடைய சிரிப்புத்தானாம். காதோடு காது அகலமாக அவர் சிரிப்பதை பிரிட்டிஷ் பெண்கள் விரும்பவில்லை என்று ஓர் அபிப்பிராய வாக்கெடுப்பு உணர்த்துகிறது! அத்தகைய சிரிப்பு போலித்தனமாக இருப்பதாகப் பெண்கள் கருதுகின்றனர். டோனி பிளேயர் தற்போது அடிக்கடி சிரிக்காமல் சீரியஸாக இருக்கப் பழகி வருகிறார்!

— ஆர். ராமசுப்பிரமணியன்

ஆதாரம்: ஹிந்து

# முதல்வருக்கும்

முதலமைச்சரின் அறையையும், மேயரின் அறையையும் முழுக்க முழுக்க ஸோலார் எனர்ஜி கொண்டே செயல்பட வைக்கும் திட்டத்தை எக்ஸ்நோரா தயாரித்திருக்கிறது. அவர்களுடைய ஒப்புதல் கிடைத்தவுடன் உடனடியாக வேலை துவங்கப்பட்டு விடும்.

"மாநில முதல்வரின் செக்ரடேரியட் அறையும், தலைநகர் மேயரின் அறையும் ஸோலார் சக்தியால் இயங்குகின்றன என்ற செய்தி பரவினால் அதுவே கிரியா ஊக்கி மாதிரி பலரையும் தூண்டும். எனவேதான் இந்த இரு முக்கிய வி.ஐ.பி.க்களின் அலுவலகங்களைத் தேர்ந்தெடுத்தோம்!" என்கிறார் எக்ஸ்நோராவின் செயலாளர் வி.என்.எஸ்.

சூரிய ஒளியில் தயாரிக்கப்படும் மின்சாரத்தால் ஏ.சி., மின்விசிறிகள் போன்ற சாதனங்களையும் இயக்க முடியுமா என்ன? "தாராளமாக!" என்று விளக்குகிறார் அவர்.

இரண்டு படுக்கை அறைகள் கொண்ட ஒரு ஃப்ளாட் அல்லது வீட்டுக்கு, ஸோலார் எனர்ஜி மூலம் விளக்குகள், மின்விசிறி, ஹீட்டர், ஃப்ரிட்ஜ், டீவி ஆகியவற்றை இயக்க, குறைந்தபட்சம் ஒரு லட்ச ரூபாய் முதலீடு செய்ய வேண்டும். இது தோராயமான கணக்கு. ஏ.ஸி. பொருத்தினால் இன்னும் சற்று கூடவே ஆகும். இப்படி ஆரம்பத்தில்



• ஆரோவில்லில் சோலார் கிராமம்.

அதிகம் செலவாகிறது என்பதால்தான் அரசு மானிய உதவி அளிக்கிறது. அரசு 50 சதவிகித 'சப்ஸிடி' தருகிறது. 25 சதவிகிதச் செலவுக்கு இன்கம்டாக்ஸ் ரிபேட் கிடைக்கிறது.

"குடிசைப் பகுதிகளில் விளக்குகளும், பம்ப்புகளும் இப்போது வழக்கமான கரன்ட் மூலமே இயக்கப்படுகின்றன. இந்தப் பகுதிகளில் ஸோலார் விளக்குகளை அறிமுகப் படுத்தினால், மின்சாரம் சேமிக்கலாம். இது மட்டுமல்ல; சூரிய ஒளியில் 0.2 சதவிகிதம் கூட நாம் பயன்படுத்துவதில்லை. இப்போது நாம் உபயோகிக்கும் மின்சாரத்தைப் போல, 20,000 மடங்கு எரிசக்தி சூரிய ஒளியில் இருக்கிறது. விறகும், நிலக்கரியும் எடுக்க எடுக்கக் குறைந்து வருகின்றன. ஆனால் சூரிய ஒளிச் சக்தி அப்படி அல்ல. தொடர்ந்து கிடைத்துக் கொண்டே இருக்கும்!" என்கிறார் வி. என். சுப்பிரமணியம்.

"அடுத்த நூற்றாண்டில் ஸோலார் எனர்ஜிதான் நிச்சயம் பயன்தரப் போகிறது. அதை இப்போதே அரசாங்கம் பிரபலப் படுத்தத் தொடங்க வேண்டும். முதலில் பெரிய தொழிலகங்களை, ஸோலார் எனர்ஜி பயன்படுத்த ஊக்குவிக்க வேண்டும். ஸ்பிக், எம்.ஆர்.எல். அசோக் லேலண்டு போன்ற பெரிய தொழில்துறை அமைப்புகள் இதில் ஆர்வம் காட்டி முழு மூச்சாக முனைந்தால், பிற துறையினரும் ஆர்வம் காட்டுவார்கள். ஏனென்றால் இனி எதிர்காலத்தில் இதனால்





• ஜாலோவிலிருந்து வந்து ஆரோவில் கிராமத்தைப் பார்த்து பிரமிக்கிறார்கள்...

# மேயருக்கும் சூரியசக்தி!

அதிகம் பயனடையப் போவது இந்தத் தொழில்துறைதான்!" என்கிறார் வி.என்.எஸ். அழுத்தமாக.

புதுவை, ஆரோவில் நகரில் நூறு சத விகிதம் சூரிய சக்தியைப் பயன்படுத்துகிறார்கள். ஸோலார் பம்ப், ஸோலார் டீவி, ஸோலார் ஃப்ரிட்ஜ், ஸோலார் ஹீட்டர், ஸோலார் லைட், ஸோலார் ஏ.ஸி. என்று சர்வம் ஸோலார் மயம்தான்!

தில்லியில் லோதி எஸ்டேட்டில் உள்ள ஹட்கோ அலுவலகத்தில் முழுக்க முழுக்க ஸோலார் மின்சக்தியைத்தான் பயன்படுத்துகிறார்களாம்.

ராஜஸ்தானத்துப் பாலைவனங்களில் இப்போது நிறைய இடங்களில் ஸோலார் பாண்ட் எனப்படும் சூரிய ஒளிக் குளம் கட்டி வருகிறார்கள்.

சென்னை ஐ.ஐ.டி.யில் படித்த பேராசிரியர் சீனிவாசன், இந்தத் துறையில் ஒரு புகழ்பெற்ற ஆலோசகராக அமெரிக்காவில் விளங்குகிறார். 'ஸோலார் பாண்ட்' கட்டி, அதிலிருந்து மின் சக்தியைப் பெறும் தொழில்நுட்பத்தைக் கண்டு பிடித்தவர் இவர்.

தரைக்குக் கீழே ஓர் அடி, ஒன்றரை அடி ஆழத்தில் குளம் போல் அமைத்து, அதில் ஸோடியம் குளோரைடும், மக்னீஷியம் குளோரைடும் கலந்து செலுத்தி விட வேண்டும். தண்ணீர் வெளியே கசிந்து விடக் கூடாது. மேலே உள்ள சிம்னி வழியாக சூரிய சக்தி குளத்தில் இறங்கி, பாட்டரியை மின் சக்தியுடையதாக மாற்றும்.

"இஸ்ரேல் போல வேறு எந்த நாடும் சூரிய சக்தியை மிகுந்த அளவு பயன்படுத்துவதில்லை" என்கிறார் பேராசிரியர் சீனிவாசன்.

"இந்த டி.ஸி. கரன்ட்டை ஏ.ஸி. கரன்ட்டாக மாற்ற கன்வர்ட்டர்கள் இருக்கின்றன; பிரச்னைகளே இல்லை. ஸோலார் எனர்ஜியால் சுற்றுச் சூழல் பாதிப்பு எதுவும் உண்டாவதில்லை. மற்ற எந்த வகை மின் உற்பத்தியிலும், ஏதேனும் ஒரு வகையில் சுற்றுச் சூழல் பாதிப்பு உண்டாகிறது.

"இதைக் கருத்தில் கொண்டுதான் எக்ஸ்நோரா வெகு தீவிரமாக சூரிய ஒளி மின்சக்தியைப் பரப்பும் உத்தியை மேற்கொண்டு வருகிறது!" என்கிறார் வி.என்.எஸ்.

- சித்தார்த்

# பூக்கள் நாளையும் மலரும்

**26**

**பிரபஞ்சன்**

...ஆனாலும், டில்லிக் குளிர் கொஞ்சம் கூடுதல் என்றுதான் தோன்றுகிறது, சண்முகம். ஊட்டிக் குளிரை அனுபவித்து இருக்கிறேன். ஊட்டியில் இப்போது மரங்கள் குறைந்து கொண்டுதானே வருகின்றன ஆண்டு தோறும். தவிரவும் ஊட்டி என்றதும், அதன் குப்பையும் அழுக்கும், மனிதர்களைத் தின்னுகிற வியாபாரப் பாவிகளுமேதானே? இந்தியாவிலேயே, அழுக்கு இல்லாத இடம் எது என்று வழக்கம் போல நீங்கள் கேட்பீர்கள்? அதுவும் சரிதான். கொடைக்கானலிலும் நான் இந்தக் குளிரை அனுபவித்து இருக்கிறேன். ஐஸ் கட்டியை வாயில் போட்டுக்கொண்டு, அது நாக்கிலும், வாயின் உள் சுவரிலும் 'சிக் சிக்'கென்று கடிப்பதை ரசிக்கிற குழந்தை மாதிரி. கொடைக்கானல் குளிர். ஜனங்கள் இன்னும் அதிகம் கெடுக்கவில்லை. ஆனால டில்லிக் குளிர், ஐஸ் கட்டியை உள்ளங்கையில் பிடிப்பது போல இருக்கிறது, சண்முகம். முதல் வாரம், 'ஏண்டி வந்தாய்' என்று நானே என்னை நொந்து கொண்டேன். என் மேல் பெரிய நம்பிக்கை வைத்து, சர்வ தேசத் தொழில் முறை நேர்ப் பயிற்சிக்கு, நிபுணர்கள் மத்தியில் நான் புழங்க வேண்டும் என்று என்னை அனுப்பி வைத்திருக்கிற சண்முகத்துக்கு ஏமாற்றம் தரக்கூடாது என்று அந்தக் கொல்லும் குளிரை, எரியும் பனியை நான் சகித்துக் கொண்டேன். அடுத்த வாரம், அது பழகி விட்டது, சண்முகம். என் வேலையையும் நான் ரசிக்கக் கற்றுக் கொண்டேன். அதற்குத் தக, என்னை வடிவமைத்துக் கொள்ள நான் கற்றுக் கொண்டேன். எல்லாம் நீங்கள், எனக்குக் கற்றுக் கொடுத்தது தானே? பெருந்தன்மை காரணமாக நீங்கள் இதை மறுப்பீர்கள். என்றாலும் இது உண்மை.

மிகுந்த மனக்கிலேசம், தனிமை காரணமாக, நான் துவண்டபோது, நீங்களே என் துணைக்கு வந்தீர்கள். திரு. அர்த்தநாரி

அவர்கள், தனியாக 'கான்டிராக்ட்' பிசினஸ் தொடங்கி, வெற்றிகரமாகவே தொழில் செய்வதைக் கண்டு நான் களித்தேன். அவர் மீண்டும் என்னை அழைத்தபோது, அவருடன் இணைந்து கொள்ள நான் மறுத்தேன். அவர், நம் இருவரையும் இணைத்துக் கொச்சையாகப் பேசியபோது, இரண்டாம் திருமணத்துக்கும் ஏற்பாடு செய்து கொண்டிருந்ததை அறிந்து, நான் அதிர்ச்சிதான் அடைந்தேன். நீங்கள் தான், அந்தச் சந்தர்ப்பத்தை அழகாக நான் புரிந்து கொள்ளச் செய்தீர்கள். எனக்கு வேண்டாம் என்று, நான் என்று புறக்கணித்தேனோ, அப்புறம், அவருடைய நடவடிக்கை பற்றி அபிப்ராயம் சொல்ல நான் யார்? எனக்கு எதற்கு ஆவேசம் வர வேண்டும்? இது என்ன மனக் கோளாறு? நான் செய்யத்தக்கது, அவரும், அவருடைய மனைவியும் சந்தோஷமாக வாழட்டும் என்று பிரார்த்திப்பது மட்டும் தானே? தேர் நிலைக்குத் திரும்பியது, சண்முகம். என் மனம், மிகவும் தெளிவாக இருக்கிறது, சண்முகம்.

உங்கள் கடிதம் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தந்தது என்பதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது, சண்முகம். தாங்களும் பிந்து அக்காவும் இசைவு கொண்டிருக்கிறீர்கள் என்று அறிந்தபோது, நான் அடைந்த மகிழ்ச்சி சொல்லும் தரமன்று. பிந்துவை, எனக்கு மிகவும் நன்றாகத் தெரியும். கழுவி வைத்த, பூ போட்ட கண்ணாடி தம்ளர் அவள். எத்தனை அவப்பெயர்களோடு வாழ்ந்தாள் அவள்! காலையிலே பேப்பர் போடும் பையன் முதல், பால்காரன் தொடங்கி, ராத்திரி சாமிக்குப் பூ கொடுக்கிற பூக்காரன் வரைக்கும் எத்தனை ஆண்களோடு அவள் சேர்த்துப் பேசப்பட்டிருக்கிறாள்? உலகத்து ஆண்கள் எல்லாரோடும் அல்லவா அவள் இணைக்கப்பட்டாள்? கணவன் துணையோடு வாழாத பெண் என்றால், அவள் சுலபமானவள் அல்லது அலைபவள் என்றல்லவா பெண்களும்கூட நினைக்கிறார்கள்?

சபேசன் எவ்வளவு உயர்ந்த மனிதர். எத்தனை கொள்கைப் பிடிப்போடு, கறைபடியா



மல் வாழ்கிற மனிதர். அந்த மனிதரோடு அவர் மனைவியே, என்னை இணைத்தாள் என்பது என்ன குரூரமான வேடிக்கை? அனு, என்னை இழிவுபடுத்தியது இருக்கட்டும். அவள் கணவனையே, அவள் புரிந்து கொள்ள வில்லையே என்பதுதான் என் வருத்தம். திருமணம் ஆகி, ஒரு குழந்தைக்கும் தாயான ஒரு பெண், தன் கணவனின் இருதயத்தையே அறியவில்லை என்பது என்ன சோகம். ஏன் இப்படி நேர்கிறது... போகட்டும், சண்முகம், பழைமைகளை மறப்போம்.

ஆறு மாதங்கள் இந்தப் புதிய ஊரில், புதிய சீதோஷ்ண கதியில் நான் இருக்க வேண்டும். இந்த நினைவு எனக்கு மகிழ்ச்சி தருகிறது. ஜப்பானில் இருந்து வந்திருக்கிற, யோஷி மோட்டோ என்கிற இளைஞன், என் அடுத்த அறையில்தான் தங்கி இருக்கிறான். எத்தனை சுறுசுறுப்பான இளைஞன் என்கிறீர்கள்! ஜப்பானின் மனித உருவம் அவன். சபிக்கப்பட்ட மக்கள் என்று உலகம் சொல்லும் அவர்கள் அல்லவா, இந்த உலகை ஆள்பவர்கள்? ஏன்? யோஷியைப் பார்த்தே இதை நான் கண்டு பிடித்தேன். அவன் என்னிடம் சொன்னான். என்னை அவன் 'வெள்ளி' என்றுதான் அழைக்கிறான். 'வள்ளி' வாயில் நுழைய வில்லை. வள்ளிக்கு நான் அர்த்தம் சொன்னேன்.

தமிழ்நாடு, ஒரு காலத்தில், வள்ளிக்கிழங்குக்குப் பெயர் பெற்றது. வள்ளி விளைகிற நிலம், செழிப்பானது என்று மக்கள் நம்பினார்கள். வளத்துக்கு அதைக் குறியீடாகச் செய்தார்கள். முருகனின் மனைவியேகூட, வள்ளிக் கொடியில் பிறந்தவள் என்று கதை சொன்னார்கள். வள்ளிக் கொடியை நினைவுபடுத்தவே வளமை, வள்ளல் போன்ற சொற்கள் எல்லாம் பிறந்தன, என்று நான் சொன்னேன். அது முதல் என்னை அவன், 'வளமை' அல்லது வெள்ளி என்று அழைக்கத் தொடங்கினான். அவன் என்னிடம் சொன்னான்.

"இந்தியாவில் நான் சில ஆண்டுகள் இருக்கப் போகிறேன் வெள்ளி"

"ஏன்? இந்தியப் பெண்கள் உன்னைக் கவர்ந்துவிட்டார்களா, என்ன?"

"அதுவும் ஒரு காரணம்தான். இதில் வெட்கம் என்ன? நான் தங்க நினைக்கிற காரணம் வேறு. உங்கள் தேசம், கட்டடக் கலைக்கு மிகவும் பெயர் பெற்றது. உங்கள் கோவில்கள், கோபுரங்கள், அணைக்கட்டுகள் என்னை வியக்க வைக்கின்றன. ஆசியாவில், இந்தியாவை நிகர்த்த நாடு, இந்தக் கோணத்தில் இல்லை. நாங்கள், கட்டடக் கலையில், இந்தச் சாதனை செய்தவர்கள் இல்லை. இந்தியாவின் பழைய கட்டடக் கலையைக் கற்றுக் கொண்டு போக விரும்புகிறேன். உங்கள் பழமையையும், எங்கள் தொழில்நுட்பப் புதுமையையும் கலந்து, புதிய முறையை நான் கண்டுபிடிப்பேன். ஜப்பானின் பெருமை, கூடும் அல்லவா?"

இப்படி, உலகத்துத் தேனைத் திரட்டி, தங்கள் நாடுகளில் கூடு கட்டும் தேனீக்களைக் கொண்டிருப்பதால் அல்லவா, அவன் நாடு மேலோங்குகிறது? ரஷ்யாவில் இருந்து, ரஷோ என்று ஒரு பெண்மணி வந்திருக்கிறாள்.

அவள், ஒரு புதிய கண்டுபிடிப்பில் இருக்கிறாள். என்ன தெரியுமா? உஷ்ணமும், குளிரும் உட்புக முடியாத சுவருக்கான பொருளைக் கண்டுபிடிக்கும் ஆராய்ச்சி. அதுவும், சாதாரண மக்கள் உபயோகிக்கிற விலையில் இருக்க வேண்டும் என்கிறாள்.

எல்லாவற்றையும்விட, சண்முகம், பிரான்சில் இருந்து வந்துள்ள கேதரீன் என்பவள் தான் என்னை மிகவும் கவர்ந்த பெண்மணியாக இருக்கிறாள். அண்மையில்தான், ஒரு கார் விபத்தில், அவள் கணவன், ஒரு வயதுக் குழந்தை, மற்றும் அவளது அம்மா எல்லோரும், குடும்பமே அவள் கண் முன்னால் இறந்தார்களாம். இது நடந்து, இரண்டு மாதங்கள் கூட இல்லை. வார இறுதி நாட்களுக்காக அவர்கள் 'பிக்னிக்' போயிருக்கிறார்கள். வழியில், இந்தக் கோரம் நடந்திருக்கிறது. இந்தச் சம்பவத்தை கேதரீன், அழுது அரற்றாமல், கண்ணீர் பெருக்கெடுக்காமல் என்னிடம் விவரித்தாள். யாரோ ஒருவருக்கு நேர்ந்த துன்பம் போல, அவள் இதைச் சொன்னாள்.

"உன்னால், இந்தப் பேரிடியைத் தாங்கிக் கொண்டு, உடனே இந்தியாவுக்கு எப்படிக் கிளம்பி வர முடிந்தது?" என்று நான் கேட்டேன்.

"விபத்து, 'கணவன், குழந்தை, அம்மா இவர்களின் இழப்பு பெரிய விஷயம்தான். இதைக் காட்டிலும் பெரிசு, என் வாழ்க்கை இல்லையா, வள்ளி? நான் மட்டும் சாக வில்லை என்றால் என்ன காரணம்? என்னை எந்தச் சக்தி, பிறப்பித்து விட்டிருக்கிறதோ, அந்தச் சக்திதான் வாழவும் விட்டிருக்கிறது. என்னை மட்டும். உலக யுத்தங்களில் ஹிரோ



"ஏன் என்னை உண்ணாவிரதம் இருக்கக் கூடாதுன்னு சொல்றீங்க டாக்டர்?"

"பின்னே உடம்பு இந்த நிலைமைல இருக்கும் போது அதிகமா சாப்பிட்டா என்ன ஆகிறது!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

ஷிமா, நாகசாகியில் என்ன நடக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளும் முன்னமே, செத்துப் போன கோடிக்கணக்கான மக்களின் துயரத்துக்கு முன்னால், என் துயரம் எம்மாத்திரம்? நான் இதையே ஒரு சவாலாக எடுத்துக் கொண்டேன். நான், நிச்சயம் ஏதேனும் சாதனை செய்யத்தான் போகிறேன்..."

எனக்கு நிறைய கற்றுத் தந்து விட்டாள், கேதரீன். அற்ப சோகங்கள்தானே நம்மைத் தின்று செரிமானம் செய்கின்றன? காதல், குடும்பம், சகோதரர்கள், நண்பர்கள், பிரச்னைகள், சோப் தேய்த்துக் கொண்டு இருக்கையில் குழாயில் தண்ணீர் நின்று போதல், மின்சாரம் அடிக்கடி காணாமல் போதல், அடுத்த வீட்டுக்காரன், நம் வீட்டுக்கு எதிரில் குப்பை கொட்டுதல். அல்லது அதை நாம் செய்தல் என்று எத்தனை சின்னக் கவலையில் உழல்கிறோம். பெரிதினும், பெரிதான விஷயங்களில் மனசை நிலைநிறுத்துவது, அதுக்காக உழைப்பது என்கிற முடிவுக்கு நான் இந்த நிமிஷம் வந்திருக்கிறேன்.

சண்முகம், நான் தங்கி இருக்கிற முதல் மாடி அறை ஜன்னல் கதவைத் திறந்தால், எனக்குக் கையெட்டுகிற தூரத்தில் ஓர் அழகான பொன் அரளி மரக்கிளை. உங்களுக்குத் தெரியுமே. வெள்ளைக் கொழுக்கட்டை மாதிரி, வெள்ளைப் பூக்களுக்கு நடுவே பொன்னால் சூரணம் வைத்த மாதிரி இருக்குமே, அந்த மரம். சென்ற மாதம், எதனாலோ, இலைகள் எல்லாவற்றையும் உதிர்த்துவிட்டு, வெறும் பூக்களாகவே இருந்தன. சண்முகம், எவ்வளவு சந்தோஷமான அனுபவம் என்கிறீர்கள். ஒரு கிளையில், எத்தனை மொட்டுகள்? நாலு மொட்டுகள், மொத்தம். மரம், என்றால் கரடு, முரடு இருக்குமே. இந்த மரம் ஆச்சர்யம். விரல்கள், ஐந்தையும் விரித்துப் பிடியுங்கள். அவை, நீளமாக வளர்ந்து நீண்டால் எப்படி இருக்குமோ, அது மாதிரி கிளை. அதுக்குள்ளே பூக்கள். அவையும் உடனுக்குடன் உதிர்ந்து போகின்றன.

இவை எதற்காக இப்படி அழகு அழகாக மலர வேணும்? என்னத்துக்காக இப்படி அவசரம் அவசரமாக உதிர வேணும்? எந்த விதிக்கு இது கட்டுப்பட்டிருக்கிறது? எந்த நியதி இதைச் செலுத்துகிறது. எந்த விதியின் கரம், வரைந்த ஓவியம், இது? புரியவில்லை. புரிந்து கொள்ள விரும்புகிறேன். இதை இப்படியே விசாரித்துக் கொண்டே போனால், நான் என் ஜனனத்தின் மூலத்துக்கே வந்து சேர்வேன் என்று தோன்றுகிறது, எனக்கு.

புதியவைகளைப் புரிந்து கொள்ளத் தொடங்கினால்தான், நம் அறியாமை நமக்கே தெரிகிறது. பாருங்கள். ஊருக்குப் புறப்படும் முன்பு, ஜனனியைப் பார்த்து வரச் சென்றேன். பெண்ணுடன் அவள் அம்மா. 'கிறிஸ்துவப்



மனைவி: ஆனாலும் உங்களுக்கு வர வர ஞாபக மறதி அதிகமா யிடுச்சு!

எழுத்தாளர்: எப்படிச் சொல்றே?

மனைவி: உங்க கதையைப் பார்த்து நீங்களே காப்பி அடிச்சு எழுதறீங்களே!

– சீரை கு. உதயபாரதி

பையனா?' என்று கேட்டாளே, தேவகி மாமி. அந்த மாமிதான் சொன்னாள்.

"என் மருமகன் போல ஆகுமா? என்ன அருமையான பையன். நான் தேடினாலும் இப்படி ஒரு பையன் கிடைக்காது வள்ளி" என்றாள். எப்படி? ஜனனியிடம் கேட்டேன். எப்படி இந்த மாயம் நடந்தது என்று.

"ஆல்பர்ட்டின் உணவுப் பழக்கம், வாழ்க்கை முறை, மாமிக்கு உவக்காது என்பதால், மாமிக்கு என்று தனியாகச் சமையல் சாமான்கள் தந்து விட்டார்கள். வீட்டுக்குள்ளேயே தனியாகச் சமைத்துக் கொண்டு, தன் மடியையும் காத்துக் கொண்டு, மனுஷாள் மனசையும் புண்படுத்தாமல் இருக்கிறாள் அம்மா" என்றாள் ஜனனி. சந்தோஷமாக இருக்கிறாள். மேல் படிப்பைத் தொடர்கிறாள். கணவனுடன், அவள் தொழிலிலும் பங்குகொள்கிறாள். பார்க்கவே நன்றாக இருக்கிறது. தேவகி மாமி சொன்னாள்.

"எனக்கென்று இருக்கிற நம்பிக்கைகளை, ஆசாரங்களை அவர்கள் அலட்சியம் செய்வது இல்லை. அவர்கள் பழக்கத்தில் நான் தலையிடுவது இல்லை. சாயங்காலங்களில் பேசிக் கொள்கிறோம். என் மருமகன் வீட்டில் இல்லாத நேரங்களில் நான் என் பெண்ணுக்குத் துணையாக இருக்கிறேன். காலம், கவலை இல்லாமல் கழிகிறது. பென்ஷனில், எனக்குச் செலவு செய்து கொள்கிறேன். நான் யாருக்கும் பாரமாக இல்லை..."

மாமி, ரொம்பவும் யதார்த்தமாகச் சொன்னாள். எல்லோருக்கும் ஒரு வட்டம், வரம்பு, கண்ணுக்குத் தெரியாமல் வளர்ந்து வைத்து



"சித்ரகுப்தா, ஏன் போன வாரம் இங்கே வருவோரின் எண்ணிக்கை குறைந்து விட்டது?"

"பூலோகத்தில் அப்போது லாரி ஸ்டிரைக் நடந்தது பிரபோ!"

— வந்தவாசி பா. ஜெயக்குமார்

இருக்கிறது. அதை எந்த அளவுக்கு மீறாமல் இருக்கிறோமோ, அந்த அளவுக்கு நோதல் என்பதும் இல்லை...

அப்புறம், நான் உங்களைப் பற்றியும் பேச வேண்டும் சண்முகம்.

உங்களுக்கும் பிந்து அக்காவுக்கும் ஏற்பட்டிருக்கிற இந்த இசைவுக்கு, நான் ஒரு சின்ன காரணம் என்று சொல்லிக் கொள்ள முடியும். நான் இதுபற்றி பிந்து அக்காவிடம் பேசினேன். நல்ல நண்பர்களாகப் பழகிய நீங்கள் இருவரும் பிரிய நேர்ந்த கதையை பிந்து சொன்னாள். ஒரு விஷயம் தெரியுமா, சண்முகம். இரண்டு பேர் சேர்வதற்கு என்ன என்ன காரணங்கள் சொல்கிறோம். எவ்வளவு அழகாக இருக்கிறது, கேட்க. ஆனால், பிரிவதற்கும் அதைவிட அதிகமாகக் காரணங்கள் அல்லவா சொல்லிக் கொண்டிருக்கிறோம்! வேதனையாக இருக்கிறது, கேட்க.

உங்கள் சொந்த விஷயத்தில் நான் புக விரும்பவில்லை. நான் அக்காவிடம் கேட்டேன்.

"சண்முகம், லஞ்சம் போன்ற கயமைப் பழக்கங்கள் கொண்டவரா?"

"இல்லை."

"குடிகாரரா?"

"சிச்சி."

"ஸ்திரீ லோலனா?"

"ஐயோ, இல்லை."

"பொய்யனா!"

"சத்தியமாக இல்லை."

"தீர்க்கப்பட முடியாத நோயாளியா?"

"இல்லை."

"உழைக்க விரும்பாத சோம்பேறியா?"

"இல்லை. கடுமையான தொழிலாளி."

"நாகரிகமான பழக்க வழக்கங்கள்!"

"உள்ளவர்."

"பெண்களை மதிக்காதவர்!"

"இல்லை. நல்ல ஆண்மகன் அவர்."

"அவருக்கும் மற்ற பெண்ணுக்கும் உறவு!"

"எனக்குத் தெரிந்து இல்லை."

"அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் அளவுக்காவது வசதி படைத்தவர் தானே?"

"ஆமாம். கொஞ்சம் கூடுதலாகவே."

"ஒரு பெண்ணுக்கு, இதைவிடவும் வேறு என்ன வேணும். ஏற்கெனவே நீங்கள் இரண்டு பேரும் நண்பர்கள் வேறு? என்ன, அக்கா, இதிலே என்ன புதிர்...?"

முத்து மாலையைக் கடித்துக் கொண்டு அக்கா சொன்னாள்.

"புதிர் இல்லை. யார் முதலில் பேசுவதென்று... கூச்சம்தான்..."

சண்முகம். நான் இங்கே ஒரு பொய் சொன்னேன். என்ன பொய் தெரியுமா?

"அக்கா, நீங்கள் இப்படி. அங்கே சண்முகம் உங்களை நினைக்காத, என்னிடம் உங்களைப் பற்றி விசாரிக்காத, உங்களுக்காக உருகாத நாளே இல்லை. அவர் மேசையைத் திறந்தால் உங்கள் படம். அவர் பர்சில் ஒரு நாள் பார்த்தேன். உங்கள் படம். ரொம்ப அழகான படம் அக்கா அது. எங்கே எடுத்தது? எனக்கு ஒரு 'காபி' கொடுங்கள்."

சண்முகம். இதுதான் நான் சொன்ன பொய். பிந்து 'அப்படியா' என்று சொன்னவள், கட்டிய புடைவையோடு புறப்பட்டு உங்களைப் பார்க்க வந்தாள். பிரிந்தவர் கூடினால் பேச வேண்டுமா என்று நான் பின்வாங்கிக் கொண்டேன். தாங்கள் என்னை மன்னிப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். பொய்யையும், நல்லது விளையுமானால் பேசலாம் என்றாரே வள்ளுவர்.

கடிதம் நீண்டு விட்டது, சண்முகம். இரவு இரண்டைக் கடந்து விட்டது. கடிதத்தை முடித்து விட்டதாக எண்ணி, ஜன்னல் கதவுக்கு அருகில் வந்து நின்றேன். இரவு, பனியாக அடைத்துக் கொண்டு தெருவில் கிடந்தது. பொன் அரளியில் நாலு மொட்டுக்கள் இருக்கின்றன என்று சொன்னேன் அல்லவா, அதில் ஒன்று மலர்ந்து விட்டிருந்தது.

புத்தம் புது மலர்!

இன்று புதிதாகப் பிறந்த மலர்...

சண்முகம். பூக்கள் ஏன் தினம் மலர்கின்றன, தெரியுமா? புதிய பூ ஒன்று, என்ன சொல்கிறது, தெரியுமா? இன்றைய புதிய தினத்தை மலர்ச்சியாக, மணம் வீசச் செய்யுங்கள் என்கிறது. ஒவ்வொரு தினமும் ஒரு பூவாகட்டும் என்கிறது. அழகாக இருக்கிறது அல்லவா, இது.

இன்றைக்கு இது போதும் மற்றவை அடுத்த கடிதத்தில் சிநேகிதனே...

மிக்க நட்புடன்,
வள்ளி.

(மலர்ந்தது)

# புறாவுக்கும் ஓர் அறை...

"நமக்கு தில்லிக்கு மாற்றலாகி விட்டது" என்று வசீகரன் சொன்னபோது ஜிவ்வென்று புறா சிறகடித்து எழும்புவதைப் போல் உற்சாகம் பீறிட்டது, வனஜாவுக்கு. ஏற்பாடுகள் முடிந்து, உறவினர்களிடம் சொல்லிக் கொண்டு கிளம்பிப் போய் அங்கே உயரமான கான்கிரீட் மலைகள் ஒன்றில் குடிபுகுந்த பின்பும் உற்சாகம் மாறவில்லை.

ஃபிளாட்டுகளின் நடுச் சுவரை இடித்து ஒன்று சேர்த்திருந்தார்கள். இதனால் முளைத்த சம்பந்தமில்லாத அறைகள். நான்கு படுக்கை அறைகள், ஒரு சின்ன பெயர் அறியா அறை. விஸ்தாரமான வரவேற்பு அறை. டைனிங் ஹால். இரண்டு பால்கனிகள்...

வசீகரன் ஆபீசுக்குப் போய் விட்டான்.

வனஜா வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தாள். இதன் மூவாயிரம் அடி பரப்பளவு அவளை ஆக்கிரமித்தது. ரிடையராகப் போகும் தருணத்தில் இவ்வளவு பெரிய வீடு! எதற்கு? வசீகரனும் அவளும் கண்ணாமூச்சி ஓடிப் பிடித்து விளையாடவா?

உரக்கச் சிரிக்க வேண்டும் போல இருந்தது.

சிறிய வயதில் சேலத்தில் அவள் இருந்த வீடு மிகப் பெரியது. கொல்லையில் மா, பலா, தென்னை, சப்போட்டா. வாசல் முழுவதும் மலர்ச் செடிகள், மரங்கள்.. குயில் கூவும். கிளி கொஞ்சும். அணில் ஓடி விளையாடும்.

கல்லூரிப் படிப்பு முடிந்து, திருமணமாகும் வரையில் சேலம்தான். அவளுக்கென்று ஓர் அறை. புடைவை, துணிமணிகளைக் காட்டிலும் புத்தகங்கள்தான் அலமாரிகளை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும். சன்னல் கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டால், வானம் துல்லியமாகத் தெரியும். சித்திரை மாதத்தில் சரக்கொன்றை மலர்களினூடே நட்சத்திரங்களும் நிலவும் கவிதை பாடும்.

திருமணம் முடிந்த கையோடு பம்பாய் வாசம். மூன்றே மூன்று அறைகளில் மாமனார், மாமியார், இரண்டு நாத்தனார்கள், இரண்டு மைத்துனர்கள், மாமனாரின் வயதான அக்கா, பெரிய நாத்தனாரின் மகள்... இத்தனை பேர்களும்.

வசீகரனுக்கு நல்ல உத்தியோகம், ஆபீசில் நல்ல பெயர், சம்பந்திகள் தங்கமானவர்கள், ஜாதகத்தின் மூலம் எதிர்காலம் பிரகாசமானது என்று கல்யாணம் பண்ணி வைத்தார்கள். சிட்டுக்குருவியாகப் பறந்து திரிந்த வனஜா, தன்னுடைய உடைமைகள் - கதைப் புத்தகங்கள், கவிதைத் தொகுப்புகள், பாட்டுப் புத்தகங்கள், வருடங்களாகச் சேர்த்து வைத்த கூழாங்கல்... எல்லாவற்றையும் ஒரு டிரங்குப் பெட்டியில் அடைத்து வைத்தாள்... சம்சாரச் சுழலில் அவற்றை எடுத்துப் பார்க்கக் கூட நேரம் இருந்ததில்லை! அந்தச் சின்ன அறையில் எல்லோருடைய சாமான்களும், புத்தகங்களும். பாதி ராத்திரியில் மைத்துனன் - அப்போது பி.எஸ்ஸி., - இரண்டாம் வருடம் - கதவைத் தட்டி ஏதோ ஒரு புத்தகத்தின் பெயரைச் சொல்லி வேண்டுவான். வேறு வீடு பார்க்க யாரும் முன்வரவில்லை.

"அது ராசியான வீடு. 'மட்டுங்கா' அருகே 'கன்ஸர்ன்' பக்கத்துல. நெனச்ச

---

"டீச்சருக்கு உபயோகப்படற மாதிரி பதில் எழுதியும் பெயில் ஆக்கிட்டாங்களா! என்ன எழுதினே?"

"இந்திய சுதந்தரப் போராட்ட வரலாற்றைப் பற்றி விவரித்து எழுதுன்'னு கேட்டிருந்தாங்க. இதைப் பற்றி நான் எழுதறதை விட புத்தகத்திலே பிரமாதமா சொல்லியிருக்காளே. நீங்க அதை படிச்சுப் பயன்பெறலாமேன்னு எழுதினேன்.



– வெ. ராஜாராமன்

வேளைக்கு வாத்தியார் கிடைப்பார். சின்ன நாத்தனாரின் பாட்டுக் கிளாஸ் பக்கத்துல. மாமனாரின் அந்தக் காலத்து நண்பர்கள் அங்கேயே வாசம். மாமியாருக்கும் சங்கர மடம் பக்கத்தில். 'ஆகி வந்த வீடு!" இல்லை புறாக்கூடு!

அந்த



புறாக்கூட்டிலேயே ஏகப்பட்ட ஏக்கங்களையும், ஆசைகளையும் மனசில் சுமந்து கொண்டு குடித்தனம் பண்ணி, மைத்துனன்மார்கள், சின்ன நாத்தனார் திருமணங்கள் நடத்தி, இடையே, பாஸ்கர், சேகர், ரம்யா இவர்களைப் பெற்று வளர்த்து, அதே 'ரூபாரல்' கல்லூரியில் சேர்த்து... வருடங்கள் பறந்தோடி வளர்ந்தன.

அதனூடே ஒரு பெரிய வீட்டில் வசிப்பதற்கும், தனக்கென்று ஒரு அறை வைத்துக் கொள்ளவும் ஆசை கனிந்து கொண்டேயிருக்க... முதியவர்கள் இறைவனடி சேர்ந்து.. பாஸ்கர், சேகர் திருமணம் நடந்து.. ரம்யா கல்யாணம் சென்னையில் ஆறு மாதங்கள் முன்னே முடிந்து, அவளும் ஆஸ்திரேலியாவுக்குப் பறந்த பிறகு...

இப்போது ரிடையராகவிருக்கும் மூன்று வருடங்களுக்காகத் தில்லி மாற்றம். புரமோஷனுடன்.

**உஷா மணியன்**

**வீ**ட்டைச் சுற்றிச் சுற்றி வந்தாள். ஆபீசிலேயே ஃபர்னிச்சரும் கொடுத்திருந்தார்கள். தன்னுடைய பழைய டிரங்கைத் திறந்து ஒவ்வொன்றாகத் தனி அறையில் அலமாரியில் அடுக்கி வைத்தபோது, முப்பது வருடங்கள் பின்னோடி, தான் மீண்டும் இளமையாகிப் போன பிரமை ஏற்பட்டது.

சந்தோஷத்தை யாரிடமாவது பகிர்ந்துவிட வேண்டும்.

அவசரமாகத் தன் தோழிக்குக் கடிதம் எழுதினாள்.

'என் அருமை பிரேமா... தில்லி வாழ்க்கை இவ்வளவு மகிழ்ச்சிகரமாக இருக்கும்னு நான் எதிர்பார்க்கலை. வீடு ரொம்...ப பெரிசு. இங்கே புறாவுக்கும் ஒரு அறை உண்டு...'

தென்கிழக்குக் கோடியிலிருந்த சிறிய அறையில் புறாக்கள் இரண்டு கூடு கட்டிக் கொண்டிருந்தன.

## ரசிகர்கள் மீது வழக்கு....

மிகவும் பரபரப்பாக எதிர்பார்க்கப்பட்ட 'அருணாச்சலம்' படம் வெளியான அதே நாளில் சென்னை உயர்நீதிமன்றத்தில் பொதுநல வழக்கு ஒன்றைத் தாக்கல் செய்தார், அன்பு தென்னரசன். இவர், தமிழ், தமிழர் இயக்கத்தின் செங்கை மாவட்டச் செயலாளர்.

"தமிழ்நாட்டில் முன்னணி நடிகர்கள் நடித்த திரைப்படங்கள் வெளியாகிற முதல் ஓரிருவாரங்களில் சம்பந்தப்பட்ட நடிகர்களின் ரசிகர் மன்றங்களைச் சேர்ந்தவர்கள் என்ன செய்கிறார்கள்? தியேட்டர்களிலிருந்து டிக்கெட்டுகளை மொத்தமாக வாங்கி அதிக விலைக்கு வெளியில் விற்கிறார்கள். இது சட்ட விரோதம். இதைத் தடைசெய்ய வேண்டும்" என்று தமது மனுவில் குறிப்பிட்டிருக்கிறார் இவர்.

அதனைப் பரிசீலித்த நீதிபதி, இதற்கு விளக்கமளிக்க வேண்டுமென தமிழ்நாடு அரசு உள்ளாட்சித்துறை அமைச்சக செயலாளருக்கும், தமிழக அரசு விற்பனை வரிச் செயலாளருக்கும், வருவாய்த் துறை செயலாளருக்கும் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

மனுவைத் தாக்கல் செய்த அன்பு தென்னரசனை (34) சந்தித்தோம். "எதற்காக இப்படி ஒரு வழக்கைத் தொடுத்துள்ளீர்கள்? பரபரப்பு ஏற்படுத்தும் நோக்கமா?"

"பரபரப்புக்காக இல்லை. உண்மையில் எனக்குப் பல வேலைகள் உள்ளன. தமிழ், தமிழர் இயக்கம் மட்டுமல்ல; 'தாய்த் தமிழ் கல்விப் பணி' என்ற அறக்கட்டளையின் செயலாளராகவும் உள்ளேன். இந்த அறக்கட்டளையின் மூலமாகத் தமிழ்நாட்டில் ஐந்து இடங்களில் 'தமிழ் வழிக் கல்வியை' மையப்படுத்தி ஆரம்பிக்கப்பட்ட ஐந்து ஆரம்பப் பள்ளிகளில் எங்கள் பகுதியிலுள்ள பள்ளியை நானே கவனித்து வருகிறேன்.



• அன்பு தென்னரசன்

# சமூக அக்கறையுள்ள ரஜினி என்ன செய்யப் போகிறார்?

என் நோக்கம் என்னவென்றால், உழைக்காமல் - கஷ்டப்படாமல் திரையரங்குகளில் ரசிகர் மன்றத்தின் பெயரால் டிக்கெட்டுகளை மொத்தமாக வாங்கி, அதை பத்து அல்லது இருபது மடங்கு விலை வைத்து விற்று லாபம் சம்பாதிக்கிறார்கள். இது நியாயமல்ல. இந்த அதிகாரம் எப்படி வந்தது ரசிகர் மன்றங்களுக்கு? அரசாங்கம் நிர்ணயித்த கட்டணத்தை விட கூடுதல் கட்டணம் வசூலிக்கலாமா? பொதுவாக திரையரங்கக் கட்டணங்களில் நாற்பது சதவிகிதம் கேளிக்கை வரியாக அரசுக்குப் போகிறது. ஆனால், ரசிகர் மன்றங்கள் இவ்வாறாக இலட்சக்கணக்கில் சம்பாதிக்கும் பணத்தில் கேளிக்கை வரியாக அரசுக்கு எதுவும் சேருவதில்லையே..."

"ஏதோ ஒரு சில நாட்கள் ஓரிரு காட்சிகளில் மட்டும்தானே இவ்வாறு நடக்கிறது?"

"ஒரு சில நாட்கள் ஓரிரு காட்சிகள் என்று சாதாரணமாக அலட்சியப்படுத்தி விடக் கூடாது. இது மாவட்டங்கள், நகரங்கள், சிற்றூர்கள் என்று எல்லா இடங்களிலும் நடக்கிறது. ரசிகர் மன்றத் தலைவர்கள் இதில் லட்சக்கணக்கில் லாபம் ஈட்டி வருகிறார்கள். தங்கள் அபிமான நடிகரின் மேல் கொண்ட அளவற்ற அன்பால் அவரது ரசிகர்களிடமிருந்து, குறிப்பாக அடிமட்ட ரசிகர்களிடமிருந்து இவ்வாறு பணம் கொள்ளையடிக்கப்படுகிறது. அவனுக்குள்ள ஆர்வவெறியால் அவன் தனது நான்கைந்து நாள் வருமானத்தை ஒரு திரைப்படக் காட்சிக்காக இழந்து விடுகிறான். மொத்தத்தில் சில ரசிகர் மன்றத் தலைவர்கள் பணம் சம்பாதித்து விட்டுப் போகட்டுமே என்று அந்தந்த நடிகர்களே வழிவகுக்கிறார்களா என்பதும் தெரியவில்லை. இதனால் பாதிக்கப்படுவதெல்லாம் அடிமட்ட ரசிகர்கள்தான்!"



• ரஜினியோடு....

"எம்.ஜி.ஆர்., சிவாஜி காலத்திலிருந்தே இது நடந்து வருவதுதானே?"

"அப்போதெல்லாம் இந்த அளவு கிடையாது. ஏதோ கொஞ்சம் செய்வார்கள். அந்தப் பணத்தைக் கொண்டு தோரணம் கட்டவும், போஸ்டர் கட்டவும் செய்வார்கள். ஆனால் இன்றோ இது குறுக்கு வழியில் பணம் சம்பாதிக்கும் சுலபமானதொரு வழியாகி விட்டது."

"குறிப்பாக ரஜினிகாந்த்தின் படம் ரிலீசாகும் போது இந்த வழக்கைத் தொடுப்பானேன்?"

"மற்ற நடிகர்களை விட சமூக அக்கறை உள்ளவராகவும், இன்றைய அரசியலையே நிர்ணயிக்கக்கூடிய சக்தியாகவும் அவர் பேசப்படுகிறார். பொது வாழ்க்கையில் ஊழல் ஒழிய வேண்டும் என்று குரல்கொடுக்கும் அவர், தம்முடைய ரசிகர் மன்றத் தலைவர்களின் சட்டத்திற்குப் புறம்பான இந்தச் செயலை அங்கீகரிக்கிறாரா என்று தெரியவில்லை. அவருடைய ரசிகர் மன்றங்கள் கட்டுக்கோப்பானவை. அவரைச் சந்தித்துப் படமெடுக்க வரும் ரசிகர்கள் கூட அந்தந்த கிளைத் தலைவரின் கடிதமில்லாமல் படமெடுத்துக் கொள்ள முடியாது. அதைப் போலவே இப்படிப்பட்ட செயல்களையும் நெறிப்படுத்த அவர் உதவ வேண்டும்."

"இப்படி வழக்குத் தொடுத்ததால் உங்களுக்கு ரசிகர்களிடமிருந்து ஏதேனும் மிரட்டல்கள் வந்ததா?"

"இதுவரை இல்லை. அப்படி எதுவும் வராது. அடிமட்ட ரசிகர்கள் என் கருத்தைத்தான் ஆதரிப்பார்கள். நானே என்னுடைய 'டீன் ஏஜில்' ரஜினியின் ரசிகனாக இருந்தவன்தான்! அது ஒரு காலம். ஆனால் இன்று எனக்கென்று சில சமூக நோக்கங்களும் இலட்சியங்களும் உள்ளனவே!"

**- சாவித்திரி கண்ணன்**

படம் : **ஸ்நேகிதன்**

"மமதி" என்று ஓர் இளம்பெண் தொகுப்பாளரின் பெயரைக் கண்டு "இது என்ன வித்தியாசமான பெயர்?" என்று பலரும் நினைத்திருக்கலாம். எதில்? ராஜ் டீ.வி.யில்.

மமதியிடம் ஆச்சர்யப்படுவதற்கு வேறு பல விஷயங்களும் உண்டு. மருத்துவக் கல்லூரியில் படிக்கிறார். இங்கல்ல, ரஷ்யாவில்! அங்கே "ஜி.எம்.எஸ்.சென்டர் ஃபார் ஃபாரின் எஜுகேஷன்" என்ற ஏஜென்ஸி ஒன்றையும் நடத்துகிறார் - அங்கு டாக்டராகும் எண்ணத்தோடு வரும் மாணவர்களுக்கு வழி காட்டும் விதமாக.

திருவல்லிக்கேணியில் பரந்து விரிந்த அவர்கள் வீட்டுக்கூடத்தில் (ஆறு டியூப்லைட்டுகள், கூடத்திற்கு மட்டும்) தமது சுதம்பமான சாதனைகளின் பின்னணியை நம்மிடம் விவரித்தார்.

"பிறந்து வளர்ந்தது இதே திருவல்லிக்கேணியில்தான். பள்ளிப் படிப்பு சேக்ரட் ஹார்ட் கான்வென்ட். சின்ன வயசிலிருந்தே யாருக்காவது உடல் சுகவீனம் என்றால் பதறிப் போவேன். மருத்துவராகத்தான் வேண்டும் என்ற தீர்மானம் அப்போதிலிருந்தே உண்டு. பள்ளிப் படிப்பை முடித்ததும் லெனின்கிரார்ட் பல்கலைக்கழகத்தில் மருத்துவப் படிப்பு பற்றிய விளம்பரம் பார்த்தேன். அப்ளை செய்தேன். அப்பா (சாரி - வழக்கறிஞர்) அம்மா (இல்லத்தரசி) இரண்டு பேருமே

# ரஷ்யா to ராஜ் டீ.வி!

எனக்கு பூரண சுதந்தரம் கொடுத்தாங்க. ரஷ்யா போய்ச் சேர்ந்த சில மாதங்கள் கழித்துப் பாண்டிச்சேரி, மணிபால் மருத்துவக் கல்லூரிகளில் எனக்கு இடம் கிடைத்தது. ஆனால் ரஷ்ய சூழல் இதற்குள் பிடித்துப் போனதால் அங்கேயே படிப்பைத் தொடர்ந்தேன்..."

என்றாலும் ரஷ்யாவில் காலடி வைத்தவுடனேயே அந்தச் சூழல் அவருக்குப் பிடித்து விட்டது என்று சொல்லி விட முடியாது.

"ஏஜென்ஸிக்காரங்க அங்கே போனவுடனேயே எங்களை அம்போன்னு விட்டுட்டாங்க. தெரியாத நாடு. தகராறடிக்கும் மொழிப்புலமை. இடிந்த ஹாஸ்டல்கள்! சுதாரிச்சுக்கவே கொஞ்ச நாள் ஆச்சு. நாங்கள் பட்ட கஷ்டங்களை எங்களைப் போன்ற மீதிப் பேர் படக்கூடாதென்ற நல்லெண்ணத்தில்தான் இந்த ஏஜென்ஸியைத் தொடங்கினோம்."

தொலைக்காட்சித் தொகுப்பாளர்களுக்கே உரிய பேச்சு ஸ்டைல் மமதியிடமும் இருப்பது புரிந்தது. ஆனால் விதிவிலக்காக ல, ள, ழ வை பிழையின்றி உச்சரித்தார். என்றாலும் தரு.மகனால் ஏற்றுக் கொள்ள முடியாத சில கருத்துக்களையும் பிட்டு வைத்தார்.

"மீடியாவில் ஆங்கிலம் கலந்து பேசுவதில் தப்பே இல்லை. பேசும்போது, "தாங்க் யூ"ன்னுதானே சொல்லிக்கிறோம். சொல்லப் போனா 'நன்றி'ன்றது பேச்சு வழக்கிலிருந்தே ஒழிந்துவிட்ட வார்த்தை. யாராவது "காலை வணக்கம்"னு விஷ் பண்ணி பாத்திருக்கீங்களா? மொழின்றது எதுக்கு? ஒருவர் சொல்ல விரும்புவதை மற்றவர்களுக்குப் புரிய வைக்கணும். அதற்குத்தானே?" என்றவர் செய்திகளுக்கு மட்டும் "இலக்கணத் தமிழ்தான் ஏற்றது!" என்று தரு.மகனை ஆதரிக்கிறார்.

மருத்துவப் படிப்பு - தொலைக்காட்சி நிகழ்ச்சித் தொகுப்பு என்பது விசித்திரமான காம்பினேஷனாக இல்லை...?

"பள்ளி நாடகங்களிலே நிறைய நடிச்சிருக்கேன். வானொலியிலும் இளைஞர் நிகழ்ச்சிகளில் தொடர்ந்து பங்கெடுத்துக் கொண்டதுண்டு. தொலைக்காட்சி ஆடிஷனிலும் தேர்வு பெற்றேன். அந்தச் சமயத்தில் ராஜ் டீ.வி "ஆங்க்கர் பர்ஸன்ஸ்" வேணும்னு விளம்பரம் செய்திருந்தாங்க. அதிலே சேர்ந்தேன். "சூப்பர் ஸாங்க்ஸ்" பகுதியைத் தொகுத்தளிச்சேன். பிறகு மருத்துவப்



கூறிய பதில்கள் இவை. விளையாடப் பிடிக்கும். வீணை, பியானோ வாசிப்பார். 'நிலா காய்கிறது' பாடலும், ரங்கீலாவில் 'ஹாய் ராமா' பாடலும் பிடிக்கும். சினிமாவில் வாய்ப்புக் கிடைத்தால் ஏற்றுக் கொள்ளத் தயார் - நடிகையாக அல்ல இயக்குனராக! டாக்டர் பட்டம் பெற்ற பிறகும் மூடு இருந்தால் தொலைக்காட்சியில் பணிபுரிவார்! (இப்போதே ஓரிரு தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைத் தயாரிக்கிறாராம்) நமநமவென்று உங்கள் மனத்தை அரித்துக் கொண்டிருக்கக் கூடிய அவரது பெயர்க் காரணத்தை கேட்டே விட்டோம். "சமஸ்கிருதத்தில் 'ம' என்றால் 'எனது'; மதி என்றால் 'அறிவு' என்று விளக்கினார். ஒரு கொசுறுத் தகவல். மமதியின், சட்டம் படிக்கும் அக்காவின் பெயர் மஹதி - "நாரதர் கையில் உள்ள வீணையின் பெயர் இது" என்று சுட்டிக்காட்டினார், 'எனது அறிவு!'

படிப்புக்காக ரஷ்யப் பயணம். ரெண்டு வருஷ படிப்பு முடிஞ்சு (மொத்தம் ஏழு வருடங்கள் - எம்.டி. பட்டத்தோடுதான் அனுப்புவார்களாம்). இப்போ ஐந்து மாத விடுமுறையில் வந்திருக்கேன்" என்று அவர் கூறிக் கொண்டிருந்தபோது ஸ்னூபி அவர்மீது உரிமையோடு ஏறிக் கொண்டது. "தெருவிலே முயல், பூனை, கிளி எதைக் கண்டாலும் விட மாட்டேன். வீட்டுக்குத் தூக்கிட்டு வந்திடுவேன்!" என்கிறார் இந்த புளூகிராஸ் உறுப்பினர்.

வழக்கமான சில கேள்விகளுக்கு அவர்

**— ஜி.எஸ்.எஸ்.**

அட்டை வண்ணப்படம் :
**பிரவீண்குமார்**

# ராசி

அப்பா சம்பாதித்து வைத்த சொத்தில் சாப்பிட்டுக் கொண்டு, வேலைவெட்டி பார்க்காமல் முறைப்பெண் ரம்பாவைக் காதலித்துக் கொண்டிருக்கிறார் அஜீத். ரம்பாவின் அப்பா, அவருக்கு வேறு மாப்பிள்ளை பார்க்க, இரண்டு திருமணங்கள் நின்று, நிறைய சண்டை நடந்து, ஒருத்தர் மண்டையைப் போட்டு, கடைசியில் முறைப்படி டும்டும் - சத்தியமாக இதுதான் கதை. நூக தட்டாத புராதனம், தும்மல் வரவழைக்கிறது.

ரம்பாவின் கவர்ச்சி மட்டுமே படத்தின் மூலதனம். அதுவும் கிராமத்துக் களம் அல்லவா? அவ்வப்போது ஆற்றிலோ, குளத்திலோ குளித்துவிட்டு, ஈரம் சொட்ட, பாட்டுப் பாடிக் கொண்டு உலா போகிறார். ஃபெவிகால் போட்டாற் போல அஜீத்துடன் ஒட்டிக் கொண்டு கொஞ்சம் போல் சிணுங்குகிறார். மிகக் கொஞ்சம் நடிக்கவும் முயற்சி செய்திருக்கி

வேலை பார்த்ததாக அடிக்கடி சொல்கிறார். குடும்ப விரோதம் வளர்க்க அதுவே முக்கியக் காரணம் என்பதுபோல் காட்டப்பட்டாலும் பின்னணி தெரியவில்லை. என்ன வேலை? கணக்குப் பிள்ளையா? தோட்ட வேலையா? என்ன காரணத்தால்? பிறகு எப்படி அத்தனை வசதியும் செல்வமும் வந்தது?

— முக்கியமான இந்த விஷயத்தில் தெளிவில்லாததால், அவர் அஜீத்தை மாப்பிள்ளையாக ஏற்க மறுப்பதன் சிஷிமூலம் குழப்பமாக உள்ளது.

இயல்பு மீறாத அஜீத்குமாரின் நடிப்பு படத்தின் பெரிய பலம். முழுக்க முழுக்க ஒருவித இறுகின முகத்துடன் (லவ்வடிக்கும் போதுமா?) அம்மா பாசம், காதல் நேசக் காட்சிகளில் அழகாகக் கொடி நாட்டுகிறார், 'ஆசை'க்குப் பிறகு.

மாமன் மகள் வயதுக்கு வந்து

நார் என்பதையும் சொல்லி விட வேண்டும்.

ரம்பாவின் அப்பாவாக வரும் பாலாசிங், தன் தங்கை வீட்டில்

விட்ட சமயம் சீர் கொண்டு போகிற போது அவமானப்பட்டு, சிறித் திரும்புகிற இடத்தில் ஒரு புதுக்கவிதை தெரிகிறது. தொடரக்கடவது.

டைரக்டர், மணிரத்னத்தின் நேர் சிஷ்யரோ, ஏகலைவனோ தெரியவில்லை. சிற்சில காட்சி ஆரம்பங்களிலும் வசனங்களிலும் பாதிப்பு தெரிகிறது. ஆனால் ஆரம்பிக்கிற ஜோர் இறுதிவரை தொடராத காரணத்தால்தான் பயங்கர ஜவ்வடிக்கிறது.

குறிப்பாக இடைவேளைக்குப் பிறகு நீளநீளமான காட்சிகள். கதையை எப்படிக் கொண்டு போவது என்று புரியாமல் திரு திருவென்று விழித்திருக்கிறார். ஆகவே நமக்கு நீளநீளக் கொட்டாவிகள்.

சிற்பியின் இசையில் பாடல்கள், ஆஹோ, ஏஹோ. ஒன்று கார்த்திக் ராஜாவிடமிருந்து கடன் வாங்கியது. ஒரிஜினா லிட்டி என்பது அவரைப் பொறுத்தவரை தீண்டத்தகாத விஷயமோ என்னவோ.

ஒரு முழுநீள அறுவையைப் பார்க்க நேர்ந்தது நம்ம ராசி. (இதைத் தவிர படத்துக்கான டைட்டிலுக்கு வேறு ஜஸ்டிஃபிகேஷன் இல்லை.)

— ஆர்.பி.ஆர்.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டு, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; ஃபேக்ஸ் : 2345621.
ஆண்டுச் சந்தா : ரூ. 208/-; ஆறு மாதச் சந்தா : ரூ. 104/- (உள்நாடு).

# பொன்னைப் போல் கோதுமை உங்கள் பொன்னான வாழ்வுக்கு !

சக்தி!

சத்து!



சலுகை!

சுவை!

**வாங்கத் தூண்டும் விலை**

| |
|---|
| ஒரு கிலோ மைதா - ரூ.6.50 |
| ஒரு கிலோ ரவை - ரூ.6.60 |
| ஒரு கிலோ ஆட்டா மாவு - ரூ.5.50 |

- எவ்வயதினருக்கும் எந்தப் பருவத்திற்கும் ஏற்றவை கோதுமைப் பண்டங்கள் மற்றும் கோதுமைப் பொருட்களான மைதா, ரவை ஆட்டா மாவு ஆகியவை.




***கோதுமை மற்றும் கோதுமைப் பொருட்களை அரசு பொது விநியோக அங்காடிகளில் குறைந்த விலைக்கு வாங்கலாம். விரும்பும் உணவு வகை செய்யலாம்.**

தமிழ் நாடு அரசு
உணவுப் பொருள் வழங்கல் மற்றும்
நுகர்வோர் பாதுகாப்புத் துறை




தமிழ்நாடு கோதுமை உருளை மாவு ஆலைகள் சங்கம்
129 அ பிரிவு முதல் மாடி, சிவாலாயா கட்டிடம்
119, எத்திராஜ் சாலை, சென்னை - 105.
தொலைபேசி: 8265295, 8225248, 8225236.
தொலை நகல் (FAX): 8234569

**அன்றாடம் கோதுமை உண்ணுங்கள்; ஆரோக்கிய வாழ்வை உறுதி செய்யுங்கள்**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka